அமைக்க வேண்டும். எல்லா வாகனங்களையும் வெள்ளியினாற் செய்து, கும்பாபிடேகமும் செய்ய வேண்டும்.

4. நயினார் கோயிலுள்ள இரண்டு கோயில்கள், உத்தரகோசமங்கை, திருச்சுழி, திருவாடானை, திருப்புல்லணை (திருப்புல்லாணி) பெருவயல், கோதண்ட இராமசாமி சொக்கநாத சுவாமி கோயில் ஆகியவற்றின் கும்பாபிடேகங்களைப் பார்க்க வேண்டும்.

5. மதுரைத் தேரைப் பூர்த்தி செய்ய வேண்டும். காஞ்சிபுரம் விமானம், கருவையம்பட்டிக் கும்பாபிடேகம் திருச்செந்தூர்ச் சண்முக விலாசம், கூடலழகர் கோயில் கும்பாபிடேகம் முதலியன செய்ய வேண்டும்.

6. அம்மன் கோயிலில் என் சிலையொன்றை அமைத்துக் கோயில் மரியாதைகள் செய்ய வழிவகுக்க வேண்டும். இராமேசுவரத்தில் புதிய கல்யாண மண்டபம் அமைப்பதுடன் சிதம்பரம், மதுரை, கூடலழகர் கோயில், திருச்செந்தூர், காஞ்சிபுரம் முதலிய இடங்களிலும் இவ்வாறே மண்டபம் அமைக்க வேண்டும்.

7. மதுரைக் கோயிலில் சித்தருக்கு அணிகலன்கள் செய்ய வேண்டும்.

8. இராமநாதபுரத்தில் பாற்கரேசுவரர் கோயிலைக் கட்டி முடிக்க வேண்டும்.

9. காசியில்,சத்திரம் ஒன்று கட்ட வேண்டும்

10. தனுசுக்கோடியில் சத்திரம் ஏற்படுத்தி, அதற்குக் கட்டளை அமைக்க வேண்டும்.

11. அக்கிரகாரம் ஒன்று அமைக்க வேண்டும்.

12. ஒரு குளமும், கிணறும் வெட்ட வேண்டும்.

13. தோப்பு ஒன்று அமைக்க வேண்டும்.

14. பசுக்கள் மேய்வதற்காகப் புல்வெளிகளை ஏற்படுத்த வேண்டும்.

15. மதுரையில் பிராமணர் அல்லாத மாணவர்க்கென ஒரு விடுதி அமைக்க வேண்டும்.

16. குறைந்த அளவு, பன்னிரண்டு பழமையான வடமொழி நூல்களையும், பன்னிரண்டு தமிழ் நூல்களையும் அச்சிட வேண்டும்.

17. சங்கராச்சாரியாரை அழைத்து இராமலிங்க விலாசத்தை ஆசீர்வதிக்கச் செய்ய வேண்டும்.

18. மகோதய காலத்தில் தனுசுக்கோடியில் குடும்பத்துடன் கடலில் நீராட வேண்டும்.

19. ஓர் அர்த்தோதயமும் , மகாமகமும் பார்க்க வேண்டும்.

20. காசி, பிரயாகை, கங்கை, சேது, முதலிய தலங்களுக்குப் பயணம் சென்று, ஆங்காங்குள்ள தீர்த்தங்களில் நீராட வேண்டும்.

21. இரணிய கர்ப்பம் செய்ய வேண்டும்.

22. அரண்மனைக் கடன்களைத் தீர்க்க வேண்டும்.

23. இராமேசுவரத்திலும், இராமநாதபுரத்திலும் அரண்மனைகளைப் பழுது பார்க்க வேண்டும்.

24. மகாராணியின் ஆட்சிக்காலத்தில் இங்கிலாந்திற்கு ஒரு முறை போக வேண்டும்.

25. அமெரிக்காவிற்குச் செல்ல வேண்டும்.

26. சென்னைப் பல்கலைக் கழக அவையில் உறுப்பினராக வேண்டும்.

27. தமிழ்ச் சங்கம் ஒன்று அமைக்க வேண்டும்.

28. ஏதாவதொரு சட்டசபையில் உறுப்பினராக வேண்டும்.

29. குறைந்தது எச்.சி.டி.ஈ. பட்டம் பெற வேண்டும். மகாராசா எனும் சிறப்புப் பட்டமும் பெற வேண்டும்.

30. அரச குடும்பத்தினருக்கு மதுரையில் வரவேற்புக் கொடுக்க வேண்டும்.

31. என் அன்னையாருக்கு இறுதிச்சடங்கு செய்யும் பேற்றினைப் பெற வேண்டும்.

32. என் சகோதரர் பாண்டித்துரைக்கு முன்பே நான் துன்பமில்லாமல் இறக்க வேண்டும்.

33. இறக்கும் போது நான் ஆண்டவனை நினைத்துக் கொண்டிறக்க வேண்டும்.

## இணைப்பு : 3

# சேது வேந்தர்கள் வழிமுறை

| | |
|---|---|
| 1605 – 1621 | சடைக்கத்தேவர் என்ற உடையான் சேதுபதி |
| 1622 – 1635 | கூத்தன் சேதுபதி |
| 1635 – 1646 | சடைக்கத்தேவர் என்ற தளவாய் சேதுபதி |
| 1647 – 1672 | ரெகுநாததேவர் என்ற திருமலை சேதுபதி |
| 1672 | இராஜசூரிய சேதுபதி |
| 1673 | ஆதன ரெகுநாத சேதுபதி |
| 1674 – 1710 | கிழவன் சேதுபதி என்ற ரெகுபதி சேதுபதி |
| 1711 – 1725 | திருஉடையாத் தேவர் என்ற விஜய ரெகுநாத சேதுபதி |
| 1726 | சுந்தரேஸ்வர ரெகுநாத சேதுபதி |
| 1726 – 1729 | பவானி சங்கர் சேதுபதி |
| 1730 – 1735 | கட்டயத் தேவர் என்ற முத்து விஜய ரெகுநாத சேதுபதி |
| 1736 – 1748 | சிவகுமார முத்து விஜய ரெகுநாத சேதுபதி |
| 1748 – 1749 | சேதுபதி ராக்கத் தேவர் |
| 1749 – 1762 | செல்லமுத்து விஜய ரெகுநாத சேதுபதி |
| 1763 – 1795 | முத்து ராமலிங்க சேதுபதி |
| 1803 – 1807 | இராணி சேதுபதி மங்களேஸ்வரி நாச்சியார் |
| 1807 – 1820 | முத்து விஜய ரெகுநாத சேதுபதி என்ற அண்ணாசாமி சேதுபதி |
| 1820 – 1829 | விஜய ரெகுநாத ராமஸ்வாமி சேதுபதி |
| 1829 – 1830 | இராணி சேதுபதி முத்து வீராயி நாச்சியார் |
| 1830 – 1845 | இராணி மங்களேஸ்வரி நாச்சியார் – துரைராஜ நாச்சியார் |
| 1846 – 1862 | இராணி சேதுபதி பர்வதவர்த்தினி நாச்சியார் |
| 1862 – 1873 | முத்துராமலிங்க சேதுபதி |
| 1873 – 1903 | ராஜா பாஸ்கர சேதுபதி |
| 1903 – 1928 | ராஜ ராஜேஸ்வர சேதுபதி |
| 1928 – 1967 | ஷண்முக ராஜேஸ்வர நாகநாத சேதுபதி |
| 1967 – 1979 | ராமநாத சேதுபதி |
| 1979 | இராணி சேதுபதி இந்திரா தேவி, பி.ஏ., |

## இணைப்பு : 4

# மதுரைத் தமிழ்ச் சங்கத் தலைவர்கள்

| | |
|---|---|
| 1901 – 1911 | திருமிகு. பொன். பாண்டித்துரைத்தேவர் |
| 1911 – 1913 | திருமிகு. பி.சா. சுப்பிரமணிய அய்யர் |
| 1913 – 1928 | மாட்சிமை தங்கிய பாஸ்கர இராச ராசேசுவர முத்துராமலிங்க சேதுபதி |
| 1928 – 1933 | மாட்சிமை தங்கிய அரசர் எம். தினகரபகதூர் |
| 1933 – 1967 | திருமிகு தமிழவேள் பி.டி.இராசன் |
| 1971 – 1979 | மாட்சிமை தங்கிய திரு. ஆர்.எஸ்.இராமநாத சேதுபதி |
| 1979 | மாட்சிமை தங்கிய சேதுபதி மகாராணி த.இந்திராதேவி பி.ஏ. |

## இணைப்பு : 5

# மதுரைத் தமிழ்ச் சங்கச் செயலாளர்கள்

| | |
|---|---|
| 1901 – 1911 | திருமிகு எஸ். சாமிநாதய்யர் |
| 1911 – 1932 | திருமிகு டி.சி. சீனிவாச அய்யங்கார் |
| | திருமிகு ராவ்சாகிப் மாணிக்க வாசகம் பிள்ளை |
| 1932 – 1951 | திருமிகு நாவலர் ச. சோமசுந்தர பாரதியார் |
| | திருமிகு என்.ஆர்.கிருஸ்ணசாமி அய்யங்கார் |
| 1951 – 1965 | திருமிகு வி. சண்முக சுந்தரம் |
| 1965 – 1971 | திருமிகு கி. பழனியப்பன் |
| 1971 | திருமிகு அ. வேலுச்சாமி பி.இ., |
| 1971 | திருமிகு டி.பி.எம். பெரியசுவாமி |

# இரண்டாம் பாகம்

## (1976 முதல் 2006 வரை)

<u>ஆசிரியர்</u>

**இரா. அழகுமலை,** எம்.ஏ., எம்.ஃபில்.,

# நான்காம் தமிழ்ச்சங்கம் – வயது 105

**(1976 – 2006 வரை 30 ஆண்டுகால வரலாறு )**

தமிழ்கூறு நல்லுலகில் மூவாயிரம் ஆண்டுகட்கு முன்னரே முச்சங்கம் கண்டு தமிழ் வளர்த்த பெருமைக்குரியர் பாண்டியரே! 'சோழநாடு சோறுடைத்து','சேரநாடு வேழமுடைத்து','பாண்டிய நாடு முத்துடைத்து' என்று சங்ககாலச் சேர சோழ பாண்டியர் தம் வளங்கள் வானளாவப் போற்றப்பட்டதை வரலாற்றின் வழி அறிகிறோம். தமிழ் வளர்ச்சிக்கெனவே சங்கம் அமைத்த பாண்டியர்களைக் குறித்துத் தண்டமிழ்ப் புலவர்கள் நெஞ்சாரப் போற்றிப் புனைந்த பாடல்களை நோக்கும் போது, 'பாண்டிய நாடு தமிழ் உடைத்து' என்றும் கூறலாம்.

> **"தமிழ் நிலைபெற்ற தாங்கரு மரபின்**
> **மகிழ்நனை மறுகின் மதுரை"** ( சிறுபாண். அடி 66-67)
>
> **"தமிழ் கெழு கூடல்"** ( புறம். 58 )
>
> **"தமிழ் வையைத் தண்ணம் புனல்"** (பரி.6)
>
> **"தென்தமிழ் மதுரை"** (மணி.25-131)

தேனினும் இனிய செந்தமிழ் மொழியோடு இணைந்து ஈடில்லாச் சிறப்பைப் பெற்ற பாண்டிய வேந்தர்களின் வரிசையில் நான்காம் தமிழ்ச்சங்கம் கண்ட பாண்டித்துரைத் தேவருக்கும் தக்கதோர் அரியாசனம் உண்டு.

**தலைச்சங்கம் என்னும் முதல்தமிழ்ச் சங்கத்தைத் தோற்றுவித்தவர்**
- **காய்சின வழுதிப்பாண்டியன்.**

**இடைச்சங்கம் என்னும் இரண்டாம் தமிழ்ச் சங்கத்தைத் தோற்றுவித்தவர்**
- **வெண்டேர்ச் செழியன்**

**கடைச்சங்கம் என்னும் மூன்றாம் தமிழ்ச் சங்கத்தைத் தோற்றுவித்தவர்**
- **முடத்திருமாறன் என்னும் உக்கிரப்பாண்டியன்**

**மதுரைத் தமிழ்ச்சங்கம் என்னும் நான்காம் தமிழ்ச் சங்கத்தைத் தோற்றுவித்தவர்**
- **உக்கிரப்பாண்டியன் என்னும் பாண்டித்துரைத்தேவர்**

முச்சங்கம் கண்ட பாண்டியருள் கடைச்சங்கத்தின் தலைவராக இருந்த மன்னனின் பெயரான உக்கிரப்பாண்டியன் என்ற பெயரைப் பெற்றவர் பாண்டித்துரைத் தேவர் என்பது குறிப்பிடத்தக்கது. கி.பி.2 ஆம் நூற்றாண்டில் முடிவுற்ற கடைச்சங்கத் (3-ஆம் சங்க) தலைவரின்

பெயரும், கி.பி.20 ஆம் நூற்றாண்டில் தோன்றிய நான்காம் சங்கத்தலைவரின் பெயரும் ஒன்றாக இருப்பது விந்தையிலும் விந்தை அல்லவா? இந்த விந்தையான பொருத்தத்தை, இச்சங்கம் தோன்றிய காலத்தில் சான்றோரும், புலவரும், பெரியோரும் வியந்து பாராட்டியுள்ளனர்.

1901-ஆம் ஆண்டு செப்டம்பர் 14-ஆம் நாளில் மதுரையில் தமிழ்ச்சங்கம் தோற்றம் பெற்ற ஞான்று, ஞானபோதினி என்னும் திங்கள் இதழ்,

"பாண்டித்துரைத் தேவரின் இயற்பெயராகிய உக்கிரபாண்டியன் என்ற பெயரை எண்ணிப் பார்க்கின், கடைச்சங்கத்தைத் தோற்றுவித்த உக்கிரப் பெருவழுதியே மீண்டும் பிறந்து இச்சங்கத்தைத் தோற்றுவித்தனன். மதுரையம்பதி தன்னை ஆதரித்தார் விண்ணுலகு எய்தியமையால் அவரைப் பெறுவதற்குத் தவமியற்றியது போலும்" என்று பாராட்டியது.

விவேகபானு என்ற திங்களிதழும், "உக்கிரப் பெருவழுதி காலத்தே கடைச்சங்கம் ஒடுங்கியது. ஒடுங்கிய இடத்தே உக்கிரப்பாண்டியன் என்னும் பெயருடையவராலே மீண்டும் பல நூறு ஆண்டுகளுக்குப் பின்னர் நான்காம் சங்கம் தோன்றியது" என்று புகழ்ந்தது.

சங்ககால மூவேந்தருள் பாண்டிய மன்னர்களைப் போல, இராமநாதபுரம் சேதுபதி மரபில் வந்த பாண்டித்துரைத்தேவர் மதுரையில் அமைத்த இந்நான்காம் தமிழ்ச்சங்கமானது இப்போது 105 ஆண்டுகளைக் கடந்து, தமிழ்மொழி வளர்ச்சி ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு செயலாற்றி வருகின்றது.

## உட்பிரிவுகள்

செந்தமிழ்க்கலாசாலை, செந்தமிழ் இதழ், பாண்டியன் நூலகம், தமிழ்ச்சங்கம் பவர்பிரஸ் (அச்சகம்) என்ற நான்கு அமைப்புகளுடன் இயங்கிய இச்சங்கத்தில் இப்போது அச்சகம் மட்டும் இல்லை. "பவர்பிரஸ்" என்னும் அச்சகத்தின் மூலம் கிடைத்தற்கரிய பழைய நூல்களைப் பதிப்பித்து வெளியிடும் பணி சிறப்பாக நடந்து கொண்டு இருந்தது. நூற்றுக்கும் மேலான நூல்களைப் பதிப்பித்து வெளியிட்டும், செந்தமிழ் இதழைத் திங்கள் தோறும் பிழையின்றி அச்சிட்டும் வந்தது இவ்வச்சகம். இப்போது செந்தமிழ் இதழானது வேறு அச்சகத்தில் அச்சாகித் தமிழ்ச்சங்க வெளியீடாகத் திங்கள்தோறும் வெளியிடப்படுகின்றது.

மதுரைச் செந்தமிழ்க் கல்லூரியும், செந்தமிழ் இதழும், பாண்டியன் நூலகமும், இந்நான்காம் தமிழ்ச்சங்கத்தின் முக்கண்களாக விளங்குகின்றன. இம்மூன்று அமைப்புகளின் செயல்பாடுகளையும் தமிழ்ச்சங்கமே நிருவகித்து வருகின்றது. இதற்கென்று ஆட்சிக்குழு அமைக்கப்பட்டிக்கிறது. தமிழ்ச் சங்கத்தின் தலைவரே, ஆட்சிக்குழுவின் தலைவராக இருப்பார்.

## ஆட்சிக்குழு

<u>தலைவர் :</u>

1971-ஆம் ஆண்டில் தமிழ்ச்சங்கத்தின் தலைவராக இருந்த சேதுபதி மன்னர் இராமநாத சேதுபதி 1979-ஆம் ஆண்டுவரை ஆட்சிக்குழுவின் தலைவராகவும் இருந்து செயல்பட்டார். பின்னர் இச்சேதுபதியின் துணைவியார் சேதுபதி ராணி த.இந்திராதேவியின் தலைமையின் கீழ் 1979 ஆம் ஆண்டு முதல் 1998 ஆம் ஆண்டு வரை தமிழ்ச்சங்க ஆட்சிக்குழு இயங்கியது. 5.9.1998 இல் ராணி இந்திராதேவியார் இறைவனடி சேர்ந்த பின்னர் 1999 ஆம் ஆண்டு பெப்ரவரி திங்களிலிருந்து இராமநாதபுரசேதுபதி மன்னர்,குமரன் சேதுபதி தமிழ்ச்சங்கத்தின் தலைவராகவும், ஆட்சிக்குழுவின் தலைவராகவும் விளங்குகிறார்.

நாடறிந்த தமிழறிஞர்களும், தமிழ்மொழியின் பால் ஆர்வம் உள்ளவரும், சங்கத்தின் வளர்ச்சிய்ய நாடுபவரும் மதுரைத் தமிழ்ச்சங்கத்தின் உறுப்பினராகச் சேருகின்றனர். இவர்களிலிருந்து ஆட்சிக்குழு உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். சங்கத்தலைவருடன் துணைத்தலைவரும், செயலாளரும் உறுப்பினர்களும் இணைந்து தமிழ்ச்சங்க ஆட்சிக்குழு செயல்பட்டு வருகின்றது.

செந்தமிழ்க் கல்லூரிக்கென்று கல்லூரிக்கல்விக் குழுவினரையும், செந்தமிழ் ஆசிரியர் குழுவினரையும் தேர்ந்தெடுக்கும் உரிமை ஆட்சிக்குழுவினருக்கே உரியது. தமிழ்ச்சங்கச் செயலாளரே, செந்தமிழ் இதழின் ஆசிரியராகவும் திகழ்கிறார். இவ்வாட்சிக்குழு உறுப்பினருள் சிலர் கல்லூரிக்குழுவிலும் உறுப்பினர்களாக இடம் பெற்றுள்ளனர்.

<u>செயலாளர் :</u>

சங்கத்தலைவராக விளங்கும் சேதுபதி மரபினருக்குப் பணிச்சுமைகளைக்

கொடுக்காமல், இச்சங்கத்தின் செயல்பாடுகள் அனைத்தையும் பொறுப்புடன் மேற்கொண்டு, சங்கத்தின் வளர்ச்சியில் கண்ணும் கருத்துமாகச் செயலாற்றுபவர் ஆட்சிக்குழுச் செயலாளரே ஆவர். 1975 ஆம் ஆண்டு முதலாகத் தமிழ்ச் சங்கத்தின் செயலாளராக விளங்கியவர்கள்:

| | | |
|---|---|---|
| **திரு. டி.பி.எம்.பெரியசுவாமி** | - | **1973 முதல் 1984 வரை** |
| **திரு. என்.எல்.முத்துமலைச்சாமி** | - | **1984 முதல் 1990 வரை** |
| **திரு. மா. தனுக்கோடி பாண்டியன்** | - | **1990 முதல் 2000 வரை** |
| **திரு. இரா. அழகுமலை** | - | **2000 முதல் இன்று வரை** |

செயலாளருக்கு உறுதுணையாகப் பிற ஆட்சிக்குழு உறுப்பினர்கள் செயல்படுகின்றனர்.

சங்கத்தின் சிறப்பான வளர்ச்சியில் ஈடுபாட்டுடன் உழைத்ததோடு செந்தமிழ்க் கல்லூரிக்கும், அதில் பணியாற்றும் முதல்வர் மற்றும் பேராசிரியர்கள், அலுவலர்கள், நூலகர், கடைநிலை ஊழியர் ஆகிய அனைவருக்கும் அரசின் சலுகைகளும், அரசு ஊதியமும் கிடைப்பதற்கு வகை செய்த தமிழ்ச்சங்கத்தின் முன்னாள் செயலாளர் திரு. டி.பி.எம். பெரியசுவாமி அவர்கள் 4.5.1984 இல் இறைவனடி சேர்ந்தது தமிழ்ச் சங்கத்தின் வளர்ச்சிக்கு ஓர் தடைக்கல்லாகவே அமைந்தது என்று கூறலாம். தனக்கென முயலாது, பிறர்க்கெனவே முயற்சி செய்து பிறர்நலம் பேணுநர் இருப்பதால்தான் "உண்டாலம்ம இவ்வுலகம்" என்று புறநானூற்றுப் பாடல் பகருகிறது. இப்பாடலுக்கு எடுத்துக்காட்டாகத் தன்னலம் பேணாது தமிழ்ச்சங்கத்தின் நலனிலேயே அக்கறை கொண்டு தன் முயற்சியையும், உழைப்பையும் வரையாது வழங்கிய செயலாளர் இவர்.

1984-ஆம் ஆண்டு சூலைத்திங்கள் தமிழ்ச்சங்கச் செயலாளராகப் பதவிபெற்ற வழக்கறிஞர் திரு. என்.எஸ். முத்துமலைச்சாமி அவர்கள் தமது இறுதிக் காலம் வரை (22.5.1990) பணியாற்றினார்.

1971-ஆம் ஆண்டிலிருந்து செந்தமிழ்க் கல்லூரியின் செயலாளராகப் பணியாற்றி வந்த வழக்கறிஞர் திரு. மா. தனுக்கோடி பாண்டியன் அவர்கள், 1990 ஆம் ஆண்டு ஜூலைத் திங்களிலிருந்து தமிழ்ச் சங்கச் செயலாளர் பதவியினை ஏற்றார். இவர் பத்தொன்பது ஆண்டுகள் கல்லூரிச் செயலாளராகவும், பத்தாண்டுகள் சங்கச் செயலாளராகவும்

ஏறத்தாழ முப்பது ஆண்டுகள் தமிழ்ச் சங்கத்திற்காகவும், செந்தமிழ்க் கல்லூரிக்காகவும் பணியாற்றிய பெருந்தகையாளர் ஆவார். தமிழ்ச்சங்கத்தின் புதிய கட்டிடப்பணியை மேற்கொண்டு செயலாற்றியவர். தமிழார்வம் மிக்க இவரது செயல்பாடுகளால் தமிழ்ச்சங்கம் பல வளர்ச்சிகளைக் கண்டது. 2000-ஆம் ஆண்டில், இவர் தமது பொறுப்புகளிலிருந்து விலகிய பின்னர், உயர்திரு. இரா. அழகுமலை அவர்கள் சங்கச் செயலாளராகப் பணியாற்றி வருகிறார்.

## உறுப்பினர்கள்

சான்றோரும், ஆன்றோரும், தகுதிவாய்ந்த பெரியோரும், தமிழ்ச் சங்கத்தின் ஆட்சிக்குழு உறுப்பினர்களாகத் தேர்ந்தெடுக்கப் பட்டுள்ளனர்.

1975 ஆம் ஆண்டில் இச்சங்கத்தின் ஆட்சிக்குழு உறுப்பினர்களாக இருந்தோர் பின்வருமாறு:

| | | |
|---|---|---|
| தலைவர் | - | சேதுபதி.ராணி த.இந்திராதேவியார் |
| துணைத்தலைவர் | - | மன்னர் காசிநாததுரை |
| செயலாளர் | - | திரு. டி.பி.எம்.பெரியசுவாமி |
| உறுப்பினர்கள் | – | திரு. மா. தனுக்கோடி பாண்டியன் |
| | | திரு.மா. சங்கர பாண்டியன் |
| | | திரு.ஆ. ஆண்டியப்பன் |
| | | திரு. பி. மலைச்சாமி |
| | | திரு. வி. தங்கப்பாண்டியன் |
| | | திரு. கே. கந்தசாமி |
| | | திரு. டி.ஏ. தெய்வசிகாமணி |
| | | திரு. வ. நாகமணி |

1982 ஆம் ஆண்டில் திரு. என்.எஸ். முத்துமலைச்சாமி, திரு.கே.எஸ்.டி இராஜேந்திரன், திரு. என்.எஸ்.சுந்தரவரதன், திரு. வெ.இ.பரசுராம், திரு.தெ.தேவராஜன் ஆகியோர் ஆட்சிக்குழு உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப் பெற்றனர்.

1984 ஆம் ஆண்டில் சங்கச் செயலாளர் திரு.டி.பி.எம்.பெரியசுவாமி அவர்கள் மறைந்த காரணத்தால், திரு.என்.எஸ்.முத்துமலைச்சாமி அவர்கள் சங்கச்செயலாளராகத் தேர்ந்தெடுக்கப் பெற்றார். அப்போது

மேற்குறித்த ஆட்சிக்குழு உறுப்பினர்கள் திரு. பி.மலைச்சாமி, திரு.வி.தங்கப்பாண்டியன், திரு.வ.நாகமணி, திரு.என்.எஸ்.சுந்தரவரதன், திரு.வெ.இ.பரசுராம் ஆகியோர் ஆட்சிக்குழுவில் இடம் பெறவில்லை. திரு. ஆர்.செல்லத்தேவர், திரு.வெ.பழனிச்சாமி ஆகியோர் ஆட்சிக் குழுவில் உறுப்பினர்களாக இணைந்தனர். இவ்விருவரில் திரு.ஆர்.செல்லத்தேவர், 1971 ஆம் ஆண்டு முதல் 1973 ஆம் ஆண்டு வரை தமிழ்ச்சங்கச் செய்லாளராகப் பதவி வகித்தவர் ஆவார்.

1990 ஆம் ஆண்டிலிருந்து மீனாட்சிமிஷன் மருத்துவமனையின் நிறுவனர் டாக்டர் ந.சேதுராமன் அவர்கள் ஆட்சிக்குழு உறுப்பினராகவும், கல்லூரிக்குழுத் தலைவராகவும் பதவி ஏற்றுத் தம் பங்களிப்பினைத் தமிழ்ச் சங்கத்திற்கென வழங்கி வருகிறார்.

1995 ஆம் ஆண்டில், ஆட்சிக்குழு உறுப்பினர் திரு. ஆ.ஆண்டியப்பன் அவர்களின் மறைவின் காரணமாகச் செந்தமிழ்க் கல்லூரி முதல்வர் முனைவர். அ.தட்சிணாமூர்த்தி அவர்கள் ஆட்சிக்குழு உறுப்பினராக ஆகியிருக்கிறார்.

1997 ஆம் ஆண்டில் மறைந்த திரு. சர்க்கரைச்சேர்வையும், 1998 ஆம் ஆண்டில் மறைந்த திரு. ந.தினகரசாமி அவர்களும் சங்க ஆட்சிக்குழு உறுப்பினராகச் செயலாற்றியுள்ளனர்.

தமிழ்ச்சங்கத் துணைத்தலைவரான மன்னர் காசிநாததுரை அவர்கள் 1998ஆம் ஆண்டில் இயற்கை எய்தினார். இவர் சேதுபதி மரபினராவார். சைவநெறிசீலர், இசைத்துறையில் வல்லவர், இசைபாடும் திறமையாளர், தமிழ்மொழிப்பற்று மிக்கவர், ஆங்கிலத்திலும் தேர்ந்த புலமைமிக்கவர். இத்தகைய பேறிவாளரும் பெரும்பண்பாளரும் ஆகிய மன்னர் காசிநாததுரை அவர்கள் 1975 ஆம் ஆண்டிலிருந்து தமது இறுதிக்காலம் வரை இச்சங்கத்தின் துணைத்தலைவராகப் பணியாற்றியவர் ஆவார்.

1998 ஆம் ஆண்டில் சேதுவேந்தர் மரபினரான ராஜா குமரன் சேதுபதி அவர்கள் சங்கத்தின் உறுப்பினராகச் சேர்ந்தார். சிவகங்கை அரசகுடும்பத்தின் வழிவந்தவரான ராணி இராசலெட்சுமி ரெகுராஜ் அவர்கள் 1998 இல் சங்க உறுப்பினராகச் சேர்ந்தார். சில மாதங்களில் இவர், இறைவனடி சேர்ந்ததால் சிவகங்கை அரசமரபினரோடு தொடர்பு கொண்டு இச்சங்கம் இயங்குவதற்குரிய வாய்ப்பு கிட்டாமல் போயிற்று.

1999 ஆம் ஆண்டில் ராஜா குமரன் சேதுபதி அவர்களின் துணைவியார் இராணி இலட்சுமி நாச்சியார் சங்கத்தின் உறுப்பினராகச் சேர்ந்துள்ளார். இவ்வாண்டில் திரு.எம்.பி.ஆர்.மலையாண்டி என்ற அசோக், துணைத்தலைவராகப் பதவிஏற்று, 2002 ஆம் ஆண்டு ஜூன் திங்கள் வரை இப்பதவியில் இருந்திருக்கிறார்.

1998-1999 ஆம் ஆண்டுகளில் திரு. அ.சாமிஐயர், திரு. வே.திருவரங்கராசன், திரு. இரா.அழகுமலை, திரு. க.சி.அகமுடையநம்பி, திரு.எஸ்.பரங்குன்றம் ஆகியோர் ஆட்சிக்குழு உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப் பட்டுள்ளனர்.

2000 ஆம் ஆண்டில் திரு. இரா.அழகுமலை அவர்கள் சங்கச் செயலாளராகப் பதவிஏற்றுச் சங்கத்தின் வளர்ச்சிக்கான பணிகளைச் செவ்வனே செய்து வருகிறார். 2002 ஆம் ஆண்டிலிருந்து தமிழ்ச்சங்க ஆட்சிக்குழு உறுப்பினராகச் செயலாற்றி வரும் திரு.இரா.குருசாமி அவர்கள் தற்போதைய கல்லூரிச் செயலாளராகவும் திறம்படச் செயல்புரிந்து வருகிறார்.

2002 ஆம் ஆண்டிலிருந்து சேதுபதி ராணி இலட்சுமி நாச்சியார், துணைத்தலைத்தலைவராகப் பதவியேற்றுப் பணியாற்றி வருகிறார்கள்

1971 ஆம் ஆண்டிலிருந்து, சங்க ஆட்சிக்குழு உறுப்பினராக இருந்த முன்னாள் சட்டமன்ற உறுப்பினர் திரு.கே.கந்தசாமி அவர்களின் மைந்தர் திரு.க.முத்தையா பசும்பொன், மற்றும் திரு.இரா.கண்ணன், திரு.சோ.இராமகுரு ஆகியோர் 2002 ஆம் ஆண்டில் ஆட்சிக்குழு உறுப்பினர்களாகத் தேர்ந்தெடுக்கப் பட்டுள்ளனர்.

2005 ஆம் ஆண்டில் திரு. மா.ச.கார்த்திகேய பாலாஜி திரு. எஸ்.எம்.நாகராசன் திரு. பி.வீரணன் ஆகியோர் ஆட்சிக்குழு உறுப்பினர்களாகப் பதவி ஏற்றனர்.

2006 ஆம் ஆண்டு ஜூலை 17ஆம் நாளில் நிகழ்ந்த கல்லூரிச் செயலாளர், வழக்கறிஞர் திரு. மா.சங்கரபாண்டியன் அவர்களின் மறைவு தமிழ்ச் சங்கத்திற்கு ஈடுசெய்ய முடியாத இழப்பாகும். 1971 ஆம் ஆண்டு முதல் தமிழ்ச்சங்கத்தின் ஆட்சிக்குழு உறுப்பினராகவும், 1991 ஆம் ஆண்டிலிருந்து செந்தமிழ்க் கல்லூரியின் செயலாளராகவும் விளங்கியவர்; தமிழ்ச்சங்கத்தையும் செந்தமிழ்க் கல்லூரியையும் தம் இரு கண்களாகக் கருதியவர்; தமிழ்ச் சங்கத்தின் வளர்ச்சிக்காகவே

வாழ்ந்தவர். இத்தகு பெருமைக்குரியவர் விட்டுச் சென்ற செந்தமிழ்க் கல்லூரியின் செயலாளர் என்னும் பொறுப்பு மிக்க பணியினை ஏற்றுக் கொண்டு உயர்திரு. இரா.குருசாமி அவர்கள் கல்லூரிப்பணியிலும், தமிழ்ச்சங்கப் பணியிலும் தம்மை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டிருக்கிறார். முன்னாள் செயலாளரின் மைந்தர் மா.ச.மாரியப்பமுரளி அவர்களும் சங்கத்தின் உறுப்பினராகவும் கல்லூரிக் குழுவின் உறுப்பினராகவும் விளங்குகிறார்.

**செம்படம்பர் 2006இல் தமிழ்ச்சங்க ஆட்சிக்குழு:**

**தலைவர் - இராமநாதபுர சேதுபதி மன்னர் நா. குமரன் சேதுபதி**

**துணைத்தலைவர் -இராணி இலட்சுமி நாச்சியார்**

**செயலாளர் - உயர்திரு.இரா.அழகுமலை எம்.ஏ.,எம்ஃபில்.,**

**உறுப்பினர் - திரு.டாக்டர்.ந.சேதுராமன் M.S.,M.ch., M.N.M.S.(URO) F.I.C.S**
**- திரு. இரா. குருசாமி பி.ஏ.**
**- திரு. ச. பரங்குன்றம் பி.ஏ.**
**- திரு. க. முத்தையா பசும்பொன் பி.ஏ., பி.எல்.**
**- திரு. இரா. கண்ணன்**
**- திரு. மா.ச. கார்த்திகேய பாலாஜி பி.இ.**
**- திரு. எஸ்.எம். நாகராசன் பி.ஏ.**
**- திரு.பி. வீரணன்**

சமுதாயப்பணியும் தமிழ்ப்பணியும் ஆற்றக்கூடிய சான்றோரும், கல்வி கேள்விகளில் வல்லவரும் ஆட்சிக்குழுவில் இடம் பெற்றிருக்கிறார்கள் என்பது, மேற்குறித்த தகவல்களிலிருந்து புலப்படுகின்றது.

## ஆட்சிக்குழுவின் பணிகள்

1981 ஆம் ஆண்டில் மதுரையில் 5 ஆம் உலகத்தமிழ் மாநாடு நடக்கவிருந்த வேளையில் தமிழ்ச்சங்க ஆட்சிக்குழுவினர் செய்த ஒரு சாதனை நிகழ்ச்சி இச்சங்க வரலாற்றில் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்பட வேண்டிய நிகழ்ச்சி ஆகும். அப்போது தமிழக முதலமைச்சராக இருந்த **மாண்புமிகு எம். ஜி. இராமச்சந்திரன்,** 'மதுரையில் நான்காம் தமிழ்ச்சங்கம்' ஒன்றைத் தொடங்க வேண்டுமென்று அறிவித்தார். பாண்டித்துரைத்தேவர் தோற்றுவித்த மதுரைத் தமிழ்ச் சங்கமே 'நான்காம் தமிழ்ச்சங்கமாக' நிலை பேறுடையதாக

விளங்குகிறது என்னும் செய்தியினையும், இதுநாள்வரை தமிழ்ச்சங்கம் ஆற்றிய நற்பணிகளையும் குறித்து, சங்கச்செயலாளர் டி.பி.எம்.பெரியசுவாமி அவர்களின் தலைமையிலான சங்க ஆட்சிக்குழுவினர் தமிழக முதலமைச்சரிடம் உறுதியாக எடுத்துரைத்தனர். அவற்றை ஏற்றுக் கொண்ட தமிழக முதலமைச்சர் மாண்புமிகு எம்.ஜி.ஆர்., மதுரை மாநகரில் நடைபெற்ற 5 ஆம் உலகத்தமிழ் மாநாட்டுத் தொடக்கவிழாவன்று (4.01.1981) மதுரையில் புதிதாகத் தொடங்கவிருக்கும் சங்கம் 'உலகத்தமிழ்ச்சங்கம்' என்று அழைக்கப்படும் என்று கூறியது குறிப்பிடத்தக்கது. மேலும் இம்மாநாட்டில், ஆங்கிலேயர் ஆண்ட காலத்திலேயே தமிழ் வளர்ச்சிக்கென்று நிலையான சங்கத்தைத் தோற்றுவித்த வள்ளல் பாண்டித்துரைத் தேவரின் முழு உருவச் சிலையைத் தமிழக முதலமைச்சர் திறந்து வைத்துத் தமிழ்ச் சங்கத்திற்குப் பெருமை சேர்த்தார்.

உலகத்தமிழ் மாநாடு நடைபெறுகின்ற காரணத்தால், மதுரை மாநகருக்குள் நான்கு திசைகளிலிருந்து நுழையும் பகுதியில் நான்கு தோரண வாயில்கள், நுழைவாயிலாக மிக உயரமாகவும் பிரமாண்டமாகவும் அமைக்கப் பெற்றன. மேற்குத்திசையிலிருந்து மதுரைக்குள் நுழையும் தோரண வாயிலுக்கு 'நக்கீரர் தோரண வாயில்' என்று பெயர் சூட்டியிருந்தனர். இந்நுழை வாயிலின் திறப்பு நிகழ்ச்சியானது, தமிழ்ச்சங்கச் செயலாளர் டி.பி.எம். பெரியசுவாமி அவர்களின் தலைமையில் நிகழ்ந்தது. தமிழக முதலமைச்சர், இத்தகு வாய்ப்பினைச் சங்கச் செயலாளருக்கு வழங்கிச் செயலாளரையும், தமிழ்ச்சங்கத்தையும் சிறப்பித்தார் என்பது கருதத்தக்கது.

சங்கச் செயலாளர் திரு.டி.பி.எம்.பெரியசுவாமி அவர்களின் தலைமையில் சங்க ஆட்சிக்குழுவினர், தமிழ்ச்சங்கத்தின் 80 ஆம் ஆண்டுவிழாவினையும், பாண்டித்துரைத்தேவரின் நினைவு விழாவினையும் இணைத்து 30-11-1981 ஆம் நாளில் கொண்டாடிய விழா, ஒரு சிறப்புமிக்க விழாவாகும். தமிழறிஞர்களும், பேராசிரியர்களும் கலந்துகொண்டு தங்கள் ஆய்வுரைகளை வழங்கிய மிகப்பெரிய கருத்தரங்க விழாவாக இவ்விழா அமைந்தது. காலையில் கருத்தரங்க அமர்வும், மாலையில் சொல்லரங்க நிகழ்வும் நடைபெற்றன.

காலை விழாவின் கருத்தரங்க அமர்விற்குத் தலைமைப் பொறுப்பேற்றவர் **தவத்திரு குன்றக்குடி அடிகளாவார்.**

இவர் பாண்டித்துரைத்தேவரின் தமிழ்த் தொண்டினையும், தமிழ்ச்சங்கத்தின் ஏற்றத்தையும் குறித்து மிகச் சிறந்த சொற்பொழிவாற்றினார். அடிகளாரின் தலைமையில், தமிழ்ச்சங்கம் தொடர்பான சான்றோர்களைப் பற்றிய கருத்தரங்கில் கலந்துகொண்டு ஆய்வுரைகளை வழங்கியோர் பின் வருமாறு:-

| ஆய்வாளர் | | ஆய்வுத்தலைப்பு |
|---|---|---|
| முனைவர்.ப.இராமன் | - | திரு. பாண்டித்துரைத்தேவர் |
| முனைவர். வி. முத்துச்சாமி | - | திரு. நாவலர் சோமசுந்தர பாரதியார் |
| முனைவர். சீனி சௌமியநாராயணன் | - | திரு. ரா. இராகவையங்கார் |
| முனைவர். இரா. பிச்சைக்கண்ணன் | - | திரு. சேதுபதிகளின் தமிழ்த்தொண்டு |
| முனைவர். தமிழண்ணல் | - | திரு. விபுலானந்தர் |
| பேரா. ந. இராமநாதன் | - | திரு. மு. வேங்கடசாமி நாட்டார் |
| மலேசியத் தமிழறிஞர் முரு. பழ. இரத்தினஞ் செட்டியார் | - | திரு. பண்டிதமணி மு. கதிரேசஞ்செட்டியார் |

மாலை விழாவான சொற்கோவை நிகழ்ச்சிக்கு, யோகி சுத்தானந்த பாரதியார் தலைமை வகித்தார். தமிழ்ச்சங்கக் கலாசாலையில் பயின்ற சான்றோரும், இக்காலத்தில் (1981) சங்கத்துடன் தொடர்பு கொண்ட புலவர் பெருமக்களும் தமது தமிழ்ச்சங்கம் சார்ந்த நினைவுகளைப் பகிர்ந்து கொண்ட நினைவலை நிகழ்ச்சியாக மாலை அமர்வு அமைந்தது. அவ்வாறு தமது நெஞ்சில் நிலைத்திருந்த தமிழ்ச்சங்க நினைவுகளை வாயுரையாக வழங்கிய பெருமக்கள்,

| | | |
|---|---|---|
| இசைப்பேரறிஞர் | - | வீ.பா.கா.சுந்தரனார் |
| மகாவித்துவான் | - | தண்டபாணி தேசிகனார் |
| இலக்கண வித்தகர் | - | க.வெள்ளைவாரணர் |
| பாலகவி. | - | வே. வயிநாகம் இராமநாதன் செட்டியார் |
| பண்டிதர் | - | மீ. கந்தசாமிப்புலவர் |

ஆகியோராவர். இவர்கள் தமிழ்ச்சங்கம் பற்றிய தகவல்களையும், தமிழ்ச்சங்கத்தில் பெற்ற அனுபவங்களையும் பரிமாறிக் கொண்ட நினைவலைகளைத் தாங்கிய சொற்கோவை நிகழ்ச்சியானது கேட்போரின் இதயங்களை ஈர்த்தது.

<u>பல்கலைக்கழகப் பேரவை உறுப்பினர்:</u>

மதுரையில் 5 ஆம் உலகத்தமிழ்நாடு நடைபெற்ற போது, தமிழக

முதலமைச்சர் மாண்புமிகு எம்.ஜி.இராமச்சந்திரன் அவர்கள் அமைப்பதாகக் கூறிய உலகத்தமிழ்ச்சங்கம் மதுரையில் அமைக்கப் பெறவில்லை. அதேசமயம் தஞ்சாவூரில், தமிழ்ப் பல்கலைக் கழகத்தைத் தமிழக அரசு தோற்றுவித்தது. இப்பல்கலைக் கழகத்தின் ஆட்சிக்குழு உறுப்பினராகும் (senate) சிறப்புத்தகுதி தமிழ்ச்சங்கச் செயலாளருக்குக் கிடைத்தது. தஞ்சைப் பல்கலைக் கழகம் தோன்றிய காலத்திலிருந்து இன்று வரை சங்கச் செயலாளர்களும் கல்லூரிச் செயலாளர்களும் தமிழ்ப் பல்கலைக் கழகப் பேரவை உறுப்பினர்களாகப் பொறுப்பேற்றுள்ளனர்.

**1981முதல்1984 வரை - திரு.டி.பி.எம்.பெரியசுவாமி**
**(சங்கச்செயலாளர்)**

**1984முதல்199வரை - திரு.என்.எஸ்.முத்துமலைச்சாமி**
**(சங்கச்செயலாளர்)**

**1990முதல்1997வரை - திரு.மா. தனுக்கோடிபாண்டியன்**
**(கல்லூரிச்செயலாளர்)**

**1997முதல்2006வரை - திரு.மா. சங்கரபாண்டியன்**
**(கல்லூரிச்செயலாளர்)**

**2006 முதல் - திரு.இரா. குருசாமி (கல்லூரிச்செயலாளர்)**

தமிழ்ச்சங்க ஆட்சிக்குழுவினரால் தமிழ்ப் பல்கலைக்கழகப் பேரவை உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். பின்னர் 1992ஆம் ஆண்டிலிருந்து அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தின் பேரவை உறுப்பினர்களாகத் தமிழ்ச்சங்க ஆட்சிக்குழுவிலிருந்து தேர்ந்தெடுக்கப்பெற்றுள்ளனர்.

**1992 முதல் 1992 வரை - மன்னர் காசி நாததுரை (சங்கத்துணைத்தலைவர்)**

**1992 முதல் 1998 வரை - டாக்டர் ந. சேதுராமன் (கல்லூரிக்குழுத்தலைவர்)**

**1998 முதல் 2006ஜூன் வரை - திரு.மா. சங்கரபாண்டியன்**
**(கல்லூரிச்செயலாளர்)**

**2006 ஜூலை முதல் - மன்னர் நா. குமரன் சேதுபதி (சங்கத்தலைவர்)**

பிறபல்கலைக் கழகங்களில் பேரவை உறுப்பினர்களாக இடம் பெறும் சிறப்பினை அப்பல்கலைக்கழகங்கள் மூலம் சங்க உறுப்பினர்களுக்குக் கிடைத்தனவா என்பது தெரியவில்லை. தஞ்சைத் தமிழ்ப்பல்கலைக் கழகம் தோன்றியபோது தமிழ்மொழி வளர்ச்சியில் பல்லாண்டுக்காலம் ஒரு பல்கலைக்கழகம் போல் செயலாற்றிய தமிழ்ச் சங்கத்தின் பங்களிப்பு, தமிழ்ப் பல்கலைக் கழகத்திற்குத் தேவையாக இருந்திருக்கலாம். 1981 ஆம் ஆண்டில் தான் தமிழ்ப் பல்கலைக் கழகப் பேரவை உறுப்பினராக அப்போதைய சங்கச் செயலாளராக இருந்த திரு.டி.பி.எம். பெரியசுவாமி தேர்ந்தெடுக்கப் பெற்றார்

என்பதைச் சங்க ஆட்சிக்குழுவினரது அறிக்கையின் வழி காண முடிகிறது.அதற்குப்பின்னர் 1992ஆம் ஆண்டிலிருந்து அண்ணாமலைப் பல்கலைக்கழகப் பேரவையிலும் உறுப்பினராக இடம் பெற்றுள்ளனர்.

தற்போது தமிழ்ச்சங்கத் தலைவர் **சேதுபதிமன்னர் குமரன்சேதுபதி** அண்ணாமலைப் பல்கலைக்கழகத்திற்கும், செந்தமிழ்க்கல்லூரியின் செயலாளர் **திரு. இரா. குருசாமி பி.ஏ.,** தஞ்சைத் தமிழ்ப்பல்கலைக் கழகத்திற்கும் பேரவை உறுப்பினர்களாக உள்ளனர்.

## இலக்கிய வட்டம்

தமிழ் இலக்கிய இலக்கண ஆராய்ச்சிகளை வளர்க்கும் விதமாகவும், பிறதுறை அறிஞர்களின் ஆய்வுகளைத் தமிழில் கொண்டுவருதலின் காரணமாகவும், நுண்மாண் நுழைபுலமிக்க அறிஞர்களைப் பாராட்டும் விதமாகவும் ‘இலக்கிய வட்டம்’ என்னும் ஆய்வரங்கத்தினைத் திங்கள் தோறும் நடத்திடவேண்டும் எனச் சங்கத்தார் முயற்சித்தனர். 1994 ஆம் ஆண்டு தொடங்கி ஈராண்டுகளாக இவ்விலக்கிய வட்டம் என்னும் ஆய்வரங்கங்கள் தொடர்ந்து நடைபெற்றன. பின்னர் சங்கத்தின் கட்டிடப்பணியை மேற்கொண்டதால் இவ்வாய்வரங்க நிகழ்ச்சிகளுக்குத் தடை ஏற்பட்டது. திங்கள் தோறும் இரண்டாவது வெள்ளிக்கிழமையன்று மாலை 6மணி முதல் 8மணி வரை இவ்வாய்வரங்கம் நடைபெற்றது.

பல்கலைக்கழகப் பேராசிரியர்கள், கல்லூரி முதல்வர்கள், தமிழறிஞர்கள் ஒரு துறையில் ஆய்வு நடத்திச் சாதனைபுரிந்த அறிஞர்கள் மற்றும் இவர்களைப் போன்ற பேரறிஞர்களால் ஆய்வுரைகள் வழங்கப் பெற்றன.

பாண்டித்துரைத்தேவர் நிறுவிய தமிழ்ச்சங்க நோக்கங்களுள் ஒன்றான ‘தமிழாராய்ச்சியின் வளர்ச்சி’ என்ற உயரிய நோக்கம் ‘இலக்கிய வட்டம்’ என்ற ஆய்வரங்கத்தின் மூலமாக நிறைவேறியது என்று கூறலாம்.

மேலும் தமிழ்ச்சங்கத்தின் சார்பாக அறிஞர் பெருமக்களுக்கு ஒவ்வொரு ஆண்டும் ‘இரண்டு பட்டங்கள்’ வழங்கிச்சிறப்பித்தல் வேண்டும் என்றும் ஆட்சிக்குழுவில் முடிவு செய்யப்பட்டது.

1. தமிழில் பல்வேறு துறைகளில் சிறப்பெய்திய தமிழறிஞர் ஒருவருக்கு ‘செந்தமிழ்க் குரிசில்’ என்ற பட்டமும்,

2. வேறு துறைகளில் இருந்துகொண்டு தமிழ்த் தொண்டாற்றி வருபவர்களைச் சிறப்பிக்கும் வகையில் 'செந்தமிழ்ச்செல்வர்' என்ற பட்டமும் வழங்குவது எனத் தீமானமும் நிறைவேற்றப் பட்டிருக்கிறது.

1994 ஆம் ஆண்டில், தமிழ்ப் பாவலரேறு ச.பாலசுந்தரம் அவர்களுக்குச் 'செந்தமிழ்க்குரிசில்' என்ற பட்டமும், காவல்துறையில் அதிகாரியாகப் பணியாற்றிக் கொண்டு தமிழார்வமுடையவராய்த் தமிழ்ப்பணி செய்து வரும் பேரறிஞர் வாசு.கணபதி அவர்களுக்குச் 'செந்தமிழ்ச் செல்வர்' என்ற பட்டமும் வழங்கிச் சிறப்பித்தனர்.

இப்படிப்பட்ட மிகச் சிறந்த பணிகளைச் செய்து சங்ககாலத் தமிழ்ச்சங்கம் போல இயங்கக் கூடிய சங்கமாக நான்காம் தமிழ்ச்சங்கம் விளங்குகிறது.

## கட்டிடப்பணிகள்

1901 ஆம் ஆண்டிலிருந்து 1990 ஆம் ஆண்டுவரை, பாண்டித்துரைத் தேவருக்குச் சொந்தமான மாளிகையிலேயே இச்சங்கம் இயங்கி வந்தது என்பது குறிப்பிடத்தக்கது. மதுரையில் வடக்குவெளிவீதியில் உள்ள சேதுபதி உயர்நிலைப்பள்ளிக்கு (தற்போது மேனிலைப்பள்ளி) மேற்கில் உள்ள இடமே தமிழ்ச்சங்கம் அமையவிருந்த இடமாகும். அந்த இடத்தில் தலைமை அஞ்சலகம் அமைக்க இந்திய அரசு நடவடிக்கை எடுத்தது. அதனால் பாண்டித்துரைத் தேவரின் மாளிகையிலே சங்கமும், கல்லூரியும், நூலகமும், அச்சகமும் தொடர்ந்து இயங்கிவரலாயின. சங்கம் அமைந்துள்ள கட்டிடத்தை உறுதிப்படுத்துவதற்காகவும், பின்பகுதியில் உள்ள காலி இடத்தில் மாணவர்கள் படிப்பதற்கேற்ற வகையில் வகுப்பறைகளுடன் கூடிய அரங்கத்தை நிறுவுவதற்காகவும் அவ்வப்போது கட்டிடப்பணிகள் நடைபெற்றன.

1920 ஆம் ஆண்டில் சங்கக் கட்டிடத்தில் தீவிபத்து ஏற்பட்டது. அப்போது பாதிக்கப்பட்ட பகுதிகளைச் சரிசெய்ததும், அச்சகத்தை நன்னிலைக்குக் கொண்டுவந்ததும், நடுக்கூடத்தைப் புதுப்பித்ததும், மாடியில் தாழ்வாரம் அமைத்ததும் ஆகிய கட்டிடப்பணிகள் நடைபெற்றன. அப்போது சங்கச் செயலாளராக இருந்த டி.சி.சீனிவாச ஐயங்காரின் தளராத முயற்சியால், தீ விபத்து நேர்ந்த அடையாளம் தெரியாதபடி, நடுக்கூடமானது பேரவை கூடும் அரங்காக மாற்றி அமைக்கப் பெற்றது.

1924 ஆம் ஆண்டில் கட்டிடப்பணிகளைக் கவனித்து வருவதற்கெனவே நாவலர் சோமசுந்தர பாரதியார், என்.ஆர்.கிருஷ்ணன்ஐயங்கார், கே.இராமையங்கார் ஆகிய மூவரும் சேர்ந்த குழு அமைக்கப் பெற்றது.

1954 ஆம் ஆண்டில் தமிழவேள் பி.டி.இராசன் அவர்கள் தமிழ்ச் சங்கத்தின் துணைத்தலைவராக இருந்தபோது, சங்கக் கட்டிடத்தின் மாடியில் பெரிய அரங்கம் அமைத்து, மாடிப்படிகளை மாற்றி அமைத்தது, பின்புறம் ஆஸ்பெஸ்டாஸ் கூரையுடன் கூடிய பெரிய கூடம் அமைத்தது ஆகிய கட்டிடப்பணிகள் நடந்தேறின.

பின்னர் 1991 ஆம் ஆண்டில் நூறாண்டுப் பழைமையான கட்டிடத்தை மாற்றிப் புதியதாகக் கட்டிடம் அமைக்க வேண்டுமென்று தமிழ்ச்சங்க ஆட்சிக்குழுவினர் விரும்பினர். இதற்காக நன்கொடைகள் பெறுவது என முடிவெடுத்தனர். கட்டிடப்பணிகளைக் கவனிப்பதற்காக அப்போதைய சங்கச் செயலாளரான மா.தனுக்கோடி பாண்டியன் அவர்களின் தலைமையில் குழு அமைக்கப்பெற்றது. 1992 ஆம் ஆண்டில் தமிழ்ச்சங்கத்தின் தலைவராம் சேதுபதி ராணி த.இந்திராதேவியார் கட்டிடநிதியாக ரூ.1,00,000/-(ஒரு லட்சம்) கொடுத்துதவினார்கள். இச்செயல் அப்பெருந்தகையாளரின் முன்னோர்களின் தமிழ்ப் பணியின் வழிவந்தது என்றால் அது மிகையாகாது.

நீண்டநாள் கனவு நனவாகும் வகையில் நம் கல்லூரி ஆட்சிக்குழு, மாணவர்களின் நலன் கருதிச் சங்கக் கட்டிடத்தின் பின்புறமுள்ள கூடத்தை இடித்து விட்டு மூன்று தளங்களையும் ஒன்பது வகுப்பறைகளையும் கொண்ட கட்டிடத்தைக் கட்டித்தந்துள்ளது. ஒவ்வொரு தளத்திலும் மூன்று வகுப்பறைகள் உள்ளன.

பின்னர் 1996ஆம் ஆண்டில் சங்கவளாகத்தின் மையப்பகுதியில் நூலகத்துடன் காட்சியளித்த சங்கக் கட்டிடத்தையும் இடித்துவிட்டுப் புதிதாகக் கட்டுவதற்கு விரும்பிய சங்க ஆட்சிக்குழுவினர் தமிழக அரசிடம் பொருளுதவியை நாடினர். அப்போது முதலமைச்சராக இருந்த, கலைஞர் கருணாநிதி அவர்களிடம் விண்ணப்பித்தனர். தமிழ்வளர்ச்சிக்காகத் தோன்றிய இத்தமிழ்ச்சங்கத்தின் பழமையையும் பெருமையையும் சீர்தூக்கிப் பார்த்த தமிழகஅரசு 17-10-1977 ஆம் நாளில் ரூ.45இலட்சத்தைக் கட்டிடம் கட்டுவதற்கான நிதியுதவியாக வழங்கியது.

1998 ஆம் ஆண்டு ஆகஸ்டு திங்களில் நூலகத்தோடு அமைந்த

சங்கக் கட்டிடத்தை இடிக்கும் பணி மேற்கொள்ளப் பெற்றது. 1999ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்களில் மிகப் பெரிய நூலகம் கட்டுவதற்கு அடிக்கல் நாட்டப் பெற்றது. 2001 ஆம் ஆண்டில் காண்பவர் வியந்து மகிழும்படியான அருமையான கட்டிடம் கட்டப் பெற்றது. இக்கட்டிடம், தமிழ்ச்சங்கத்தின் புகழைப் பறைசாற்றுவது போல நடுநாயகமாக ஓங்கி உயர்ந்து காணப்படுகிறது.

மதுரைத்தொகுதியின் நாடாளுமன்ற உறுப்பினர் மாண்புமிகு பி.மோகன் அவர்களின் தொகுதி மேம்பாட்டு நிதியிலிருந்து வழங்கிய உதவித்தொகை ரூ.5லட்சத்தைக் கொண்டு 2002ஆம் ஆண்டில் நீண்ட அரங்கம் கட்டப்பட்டது. மூன்றுமாடிக் கட்டிடத்தின் பின்புறம் இருந்த இடத்தில், இவ்வரங்கம் அமைந்துள்ளது. இவ்வரங்கில், முதுகலை மாணவர்களும், இளநிலை(எம்ஃபில்) முதுநிலை (பிஎச்.டி) ஆய்வாளர்களும் இணைந்து நிகழ்த்தும் கருத்தரங்குகள் வாரந்தோறும் நடைபெறுகின்றன.

மதுரை மத்திய தொகுதிச் சட்டமன்ற உறுப்பினர் மாண்புமிகு ஹக்கீம் அவர்கள், தமது சட்டமன்ற உறுப்பினர் நிதியிலிருந்து சங்கத்தின் கட்டிடப்பணிக்கென ரூ.5லட்சம் வழங்கினார். இவ்வுதவித் தொகையைக் கொண்டு கருத்தரங்கக் கட்டிடத்தின் மேல்தளம் 2003ஆம் ஆண்டில் கட்டப்பெற்றது. இக்கட்டிடத்தில் இரண்டு அறைகள் உள்ளன. இவ்வறைகளை ஒட்டியதாகக் கல்லூரி மாணவியருக்கான ஓய்வறையை 2006ஆம் ஆண்டில் தமிழ்ச்சங்க ஆட்சிக்குழுவினர் புதிதாகக் கட்டிக் கொடுத்திருக்கின்றனர்.

பாண்டித்துரைத்தேவர் 1901 ஆம் ஆண்டில் வழங்கிய மாளிகை, இன்று பல கட்டிடங்களை உள்ளடக்கிய நிறுவனமாக விளங்குகிறது.

## தேர்வுப்பணிகள்

தமிழ்ச்சங்கக் கலாசாலையில் கல்விபெற்ற மாணவர்களுக்கு உணவு, உடை, உறையுள், படிப்பதற்குரிய நூல்கள் யாவற்றையும் இலவசமாக வழங்கியதுடன், தேர்வுகள் வைத்து வெற்றி பெற்றோருக்குத் 'தமிழ்ச்சங்கப் புலவர்' என்ற பட்டத்தையும் வழங்கி இச்சங்கம் கல்விச்சேவை புரிந்தது என்பது யாவரும் அறிந்ததே. செந்தமிழ்க் கல்லூரி, பல்கலைக் கழகத்துடன் இணைக்கப் பெற்ற பின்னரும் தமிழ்ச்சங்க நிருவாகம், பிரவேசம், பாலபண்டிதம், பண்டிதம் என்ற தேர்வுகளை நடத்தித் தேர்ச்சி பெற்றவர்க்குத் 'தமிழ்ச்சங்கப் புலவர்' என்னும் பட்டத்தை வழங்கியது.

இத்தேர்வுகளைச் செந்தமிழ்க் கல்லூரி மாணவர்கள் எழுதுவதில்லை. தனியாகப் படித்து எழுதுவோர்க்கே இத்தேர்வுகள் உரியவாயின. இத்தேர்வுகளை எழுதி வெற்றி பெற்றுத் தமிழ்ச்சங்கம் வழங்கிய பட்டத்தைப் பெற்றவர்களுக்கு அரசுப் பணிகள் கிடைத்தன. பிற பல்கலைக்கழகங்களில் மேற்படிப்பு தொடர்வதற்கும் இப்பட்டம் ஏற்றுக் கொள்ளப்பட்டது. அதனால் சங்கம் நடத்தும் புலவர்த் தேர்வுகளை எழுதி வெற்றி பெறுவதற்கு வசதியாகச் சில ஊர்களில் அவ்வூர்ப் பெரியோர்களால் தமிழ்க்கல்லூரிகள் நிறுவப்பெற்றன. அவ்வாறு அமைந்த சில கல்லூரிகள் பின்வருமாறு:

| | |
|---|---|
| **இளங்கோ தமிழ்க் கல்லூரி** | **- திருநெல்வேலி** |
| **கலைமகள் தமிழ்க் கல்லூரி** | **- தக்கலை** |
| **தூய வளனார் செந்தமிழ்க் கல்லூரி** | **- திண்டுக்கல்** |
| **அண்ணா தமிழ்க் கல்லூரி** | **- திருச்சி** |
| **திருவண்ணாமலை தமிழ்க் கல்லூரி** | **- திருவண்ணாமலை** |

இக்கல்லூரிகள் தமிழ்ச்சங்கத்தின் பாடத்திட்டங்களுக்கேற்ப மாணவர்களுக்குக் கற்பித்துச் சங்கம் நடத்திய புலவர் தேர்வுகளை எழுதச் செய்தன. மற்றபடி இக்கல்லூரிகளுக்கும் தமிழ்ச்சங்கத்திற்கும் வேறு எந்தத் தொடர்பும் இல்லை. இத்தகைய கல்லூரிகளிலும் சேர்ந்து பயில இயலாதவர்கள், தொடக்கப்பள்ளியில் பணியாற்றும் ஆசிரியர்கள், பிறதொழில் செய்பவர்கள், மேற்படிப்பைத் தொடர முடியாதவர்கள் ஆகிய நிலையில் உள்ளவர்கள் பள்ளி இறுதிவகுப்பை முடித்திருந்தால், தமிழ்ச்சங்கம் நடத்தும் தேர்வுகளை எழுதிப் புலவர்பட்டம் பெறும் வகையில் அஞ்சல் வழிக் கல்வி முறையை இத்தமிழ்ச்சங்கத்தில் தொடங்கினர். அஞ்சல்வழிக் கல்வி முறை 1969 இல் தொடங்கப்பெற்றது.

தமிழகஅரசு, 1977ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் வரை, சங்கப்புலவர் தேர்வெழுதியவர்களுக்கு அரசுப்பணியையும், மேற்கல்வி தொடர அனுமதியையும் அளித்தது. அதன்பின்னர் சங்கப் புலவர் தேர்வுகளைத் தமிழக அரசு ஏற்றுக் கொள்ளாததால் சங்கம் நடத்தி வந்த புலவர் பட்டத்தேர்வுகள், 1977ஆம் ஆண்டிற்குப் பின்னர் நின்று போயின.

<u>பொதுத்தமிழ்த் தேர்வுகள்:</u>

பள்ளி இறுதி வகுப்பு, கல்லூரிகளின் பட்டவகுப்பு ஆகியவற்றின்

தமிழ்ப்பாடத்தில் தேர்வுகளை நடத்திச் சான்றிதழ்கள், பரிசுகள், பாராட்டுகள் ஆகியவற்றை இன்றுவரை சங்கம் வழங்கி வருகிறது. இத்தேர்வுகளைத் தொடர்ந்து நடத்துவதற்காக 1979 ஆம் ஆண்டில் தமிழக அரசு அனுமதி வழங்கியுள்ளது.

பள்ளி இறுதிவகுப்புப் பொதுத் தேர்விலும், பல்கலைக்கழகத் தேர்விலும் மாணவர்களுக்குப் பயிற்சி அளிக்க வேண்டும் என்ற உயர்ந்த நோக்கத்தில் பாண்டித்துரைத்தேவர் தொடங்கிய இத்தேர்வுகள் இன்று வரை செவ்வனே நடைபெற்று வருகின்றன.

பத்தாம் வகுப்பு, மேல்நிலை இரண்டாமாண்டு ஆகியவற்றிற்கு அரசு வகுத்துள்ள பாடத்திட்டங்களும், கல்லூரிகளுக்குப் பல்கலைக் கழகங்கள் வகுத்துள்ள பாடத்திட்டங்களும் சங்கம் நடத்துகின்ற பொதுத்தமிழ்த் தேர்விற்குரிய பாடப்பகுதிகளாகும். அரசும், பல்கலைக் கழகங்களும் எம்முறையில் வினாக்கள் அமைத்துத் தேர்வுகளை நடத்துகின்றனவோ, அம்முறையிலேயே சங்கமும் தேர்வுகளை நடத்துகிறது.

வெற்றிபெறும் மாணவர்களுள், ஒவ்வொரு பள்ளியிலும், கல்லூரியிலும் முதல் மதிப்பெண் பெறுபவர்களுக்குப் பரிசாக நூல்கள் வழங்கப்படுகின்றன. மாநில அளவில் முதல் மூன்று நிலைகளில் வெற்றி பெறுபவர்களுக்கும் பரிசுகளை வழங்கிச் சிறப்பிக்கிறது இச்சங்கம்.

1979 ஆம் ஆண்டிலிருந்து கல்லூரிக்கல்வி, பருவமுறைக் கல்வியாக மாறியதால், ஓர் ஆண்டிற்குரிய இரண்டு பருவங்களிலும் இரண்டு ஆண்டுகள் மட்டும் பொதுத்தேர்வுகள் நடைபெற்றன. 1981ஆம் ஆண்டிலிருந்து ஓர் ஆண்டில் இரண்டுமுறையாகத் தேர்வுகளை நடத்த இயலாநிலை ஏற்பட்டது. எனவே ஆண்டிறுதியில் பொதுத்தேர்வுகள் நடைபெறும் பள்ளிக் கல்விக்கு மட்டுமே சங்கத் தேர்வுகள் நடத்தப்படுகின்றன.

உயர்நிலைப் பள்ளிகளில் பத்தாம் வகுப்பிற்குரிய தமிழ்ப் பாடத்திற்கும், மேனிலைக் கல்வியில் பன்னிரெண்டாம் வகுப்பிற்குரிய பொதுத்தமிழ், சிறப்புத்தமிழ் ஆகிய இரண்டு பாடங்களுக்கும் சங்கத் தேர்வுகள் நடைபெறுகின்றன. வினாத்தாட்களைக் குறிப்பதும், விடைத்தாள்களைத் திருத்துவதுமான பணி செய்யும் ஆசிரியர்களுக்கும், இத்தேர்வுகளுக்காகச் சங்கத்தில் பணியாற்றும் அலுவலர்களுக்கும் அன்பளிப்புகள் வழங்கப்படுகின்றன. சங்கம் நடத்தும்

தமிழ்த்தேர்வுகள் எழுதித் தமிழ்ச்சங்கத்தின் சான்றிதழ்களைப் பெறுவதில் பள்ளி மாணவர்களும் ஆர்வம் காட்டுகின்றனர். இன்றளவும் இத்தேர்வுகளைத் தமிழ்ச்சங்கம் நடத்தி வருகிறது. தமிழ்ச்சங்க ஆட்சிக்குழுவின் தலையாய பணிகளுள் இத்தேர்வுப் பணியும் ஒன்றாகும்.

## கணினி மையம்

அறிவியல் வளர்ச்சியில் சிகரமாக விளங்கும் கணினியின் (கம்ப்யூட்டர்) பயன்பாட்டினை இவ்வுலகம் அனுபவித்துக் கொண்டிருக்கிறது என்பது கண்கூடு. தமிழ் இலக்கியம் பயிலும் செந்தமிழ்க் கல்லூரி மாணவர்கட்குக் கணினி அறிவும் வேண்டும் என்ற நல்லெண்ணத்தில் 1998 ஆம் ஆண்டில் கணினி மையம் உருவானது. இக்கணினி மையத்திற்கு, 'மதுரைத்தமிழ்ச் சங்கக் கணினி மையம்' (Madurai Tamil Sangam Computer Center) எனப் பெயரிடப்பட்டுள்ளது.

முதலில் 'கணினிப் பயன்பாடு' (D.C.A) 'கணினி அச்சுக்கலை' (DTP) ஆகிய பட்டயப்படிப்புகள் (Diploma) பயிற்றுவிக்கப் பெற்றன. ஓராண்டு காலத்தில் 1999ஆம் ஆண்டில் 'முதுகலைக் கணினிப் பயன்பாடு' (PGDCA) என்னும் பட்டப்படிப்பினையும் பயிற்றுவிக்கும் வண்ணம் இக்கணினி மையம் உயர்ந்துள்ளது. இளம் இலக்கியம் (பி.லிட்), இளங்கலை (பி.ஏ) பயிலும் மாணவர்கள் முதலிரண்டு ஆண்டுகள் D.C.A. படிக்கின்றனர். முதுகலை பயிலும் மாணவர்கட்கு P.G.D.C.A கற்பிக்கப்படுகிறது.கணினிபயிற்றுவிப்போராகதிருமதி சு.இரமணி, திருமதி ஜெ.சாவித்திரி, திருமதி ம.நித்தியானந்தம் ஆகியோர் பணியாற்றுகின்றனர். இவர்களுக்குரிய ஊதியத்தைத் தமிழ்ச்சங்க ஆட்சிக்குழுவே வழங்குகிறது. கணினி பயிலும் மாணவர்களுக்கு, அவர்கள் தேர்வில் பெற்ற மதிப்பெண் அடிப்படையில், தமிழ்ச்சங்கத் தலைவர், செயலாளர் ஆகியோரின் கையொப்பம் இடப்பெற்ற சான்றிதழ்கள் வழங்கப்படுகின்றன.

அரசு வழங்கிய மானியத் தொகையிலிருந்து, கணினிப் பயிற்சி மையத்திற்கு இரண்டு கணிப்பொறிகள் முதலில் வாங்க முடிந்தது. தமிழ்ச் சங்க உறுப்பினரும் கல்லூரிக்குழுத் தலைவருமான டாக்டர்.ந.சேதுராமன் அவர்களின் உதவியில் ஐந்து கணிப்பொறிகள் கிடைத்தன. தமிழ்ச் சங்கமும் அவ்வப்போது மாணவர்களின் தேவைக்கேற்பக் கணிப்பொறிகளை வாங்கிக் கொடுத்தது. இப்போது 12 கணிப்பொறிகள் இம்மையத்தில் உள்ளன. கணினியைப் பயன்படுத்தும்

அடிப்படை அறிவோடு தமிழ்வழியில் கணினிக்கல்வியை மாணவர்கள் பெறுகின்றனர். பயிற்சித் திட்டங்களும், கட்டுரைகளும், சில பொருள் பற்றிய தகவல்களும், ஆய்வு அறிக்கைகளும் ஆகியவற்றை ஆங்கிலத்திலும் தமிழிலும் தயாரிக்கும் படிப்பினைக் கணினி மையத்தின் வழியாக மாணவர்கள் கற்கின்றனர்.

கல்லூரி முதல்வருக்காக அவர் அறையில் ஒரு கணிப்பொறியும், ஆசிரியர்களின் அறையில் தேசியத்தர மதிப்பீட்டுப் பணிப் பொறுப்பேற்று செயல்புரியும் ஒருங்கிணைப்பாளர்க்கு ஒரு கணிப்பொறியும், அலுவலகப் பணிகளுக்காக அலுவலகத்தில் 2 கணிப்பொறிகளும், நூலகத்தில் இரண்டு கணிப்பொறிகளும் ஆக 18 கணிப்பொறிகள் காலத்தின் தேவைக்கேற்ப இக்கல்லூரிப் பயன்பாட்டிற்கு உதவுகின்றன. அதுமட்டுமல்லாமல் மின் அஞ்சல் (E-Mail) அனுப்புவதற்கும், உடனுக்குடன் ஃபேக்ஸ் செய்தி (Fax) அனுப்புவதற்கும் உரிய வகையில் தமிழ்ச்சங்கத்தில் இணையதள வசதியும் செய்யப்பட்டுள்ளது. சங்கத்தின் இணையதளம் - 'சேதுபதி பாண்டித்துரைத் தேவர் இணையதளம்' என்ற பெயரைத் தாங்கியுள்ளது.

மாணவர்களின் கல்வி மேம்பாட்டிற்காக ஒளிப்படி(Xerox) செய்யும் எந்திரமும் இரண்டு வாங்கப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது. கல்லூரி வளாகத்திற்குள்ளேயே ஒரு ரூபாய் நாணயத்தொலைபேசி (Coin phone)வசதியும் செய்யப்பட்டிருக்கிறது. தேநீர், சிற்றூண்டி கிடைக்கும் வகையில் சிறிய உணவகம் ஒன்றும் கல்லூரிக்குள் இயங்கி வருகிறது.

தமிழ்ச்சங்க ஆட்சிக்குழுவினரின் பணிகள் சிறப்புற நடந்தேறுவதற்காகத் தமிழ்ச்சங்க அலுவலகம் ஒன்றும் செயலாற்றிக் கொண்டிருக்கிறது. இவ்வலுவலகத்தில் திரு.கா.சக்திக்குமார் பி.காம் (கணக்காளர்), திரு.சு.கிருஷ்ணன் (சிற்றெழுத்தர்) , திரு சு.மதன் (அலுவலக உதவியாளர்) ஆகியோர் பணிபுரிகின்றனர். இவர்களின் ஊதியத்தைத் தமிழ்ச்சங்கமே வழங்குகிறது. ஆட்சிக்குழுவின் பணிகள் அனைத்தும் தேக்கமுறாமல் நிறைவேறும் வகையில் இவ்வலுவலகப் பணியாளர்கள் தமது உழைப்பினை நல்குகின்றனர்.

## நூல் வெளியீட்டுப்பணி / நூல் வெளியீடுகள்

சென்றிடுவீர் எட்டுத்திக்கும் கலைச்செல்வங்கள்
கொணர்ந்திங்கு சேர்ப்பீர்

என்று பாட்டுக்கொரு புலவன் பாரதியார், பிறநாடுகளில் வளர்ந்துள்ள கலைகளைக் கொணர்ந்து தமிழ்மொழியோடு இணைத்துத் தமிழின்வழி அக்கலைகள் பரவ வேண்டுமென்ற தன் ஆவலை இப்பாடல் வரிகளில் பதிவு செய்திருக்கிறார். நான்காம் தமிழ்ச்சங்கம் கண்ட வள்ளல் பாண்டித்துரைத் தேவரவர்களும் தமிழகமெங்கும் உள்ள ஏட்டுச்சுவடிகளைத் தேடிக் கொணர்ந்து, கிடைத்தற்கரிய பழைமையான நூல்களைப் பதிப்பித்து வெளியிட வேண்டுமென்ற ஆவலில் அச்சகத்தை அமைத்தார்.

**அச்சகம்:**

இச்சங்கத்தின் 'பவர்பிரஸ்' என்ற அச்சகமும், 'செந்தமிழ்' என்னும் இதழும் தோன்றியதன் காரணம் யாதெனில், அரிய நூல்களை வெளியிடுவதற்கும், தமிழாராய்ச்சிப் பணியை மேற்கொள்வதற்குமே என்று கூறலாம். ஏட்டுச் சுவடிகளைத் தேடிக் கொணர்ந்து மூலபாடத்திற்கு ஏற்றவாறு படி எடுத்து, உரைவிளக்கங்கள் கொடுத்துப் பின்னர் அச்சில் சேர்த்து நூலாக ஆக்கி வெளியிடும் பணியை அச்சகமும், செந்தமிழ் இதழும் செய்திருக்கின்றன. அச்சகத்திலிருந்து நேரடியாக வெளியிடப் பெறும் நூல்கள் 'சங்கப் பிரசுரங்கள்' என்ற பதிப்பிற்கு உரியவாயின. மேலும் ஏட்டுக் சுவடிகளை ஆராய்ந்து, ஆய்வுரையுடன் சிறு சிறு பகுதிகளாகத் திங்கள் தோறும் செந்தமிழ் இதழில் வெளியிட்டுப் பின்னர் நூல் முழுமை பெற்றவுடன் 'செந்தமிழ்ப் பிரசுரங்களாக' வெளியிடப் பெற்றன. 'செந்தமிழ்' இதழில் அறிஞர் பெருமக்களால் எழுதப்பெற்ற ஆராய்ச்சிக் கட்டுரைகள், இவ்விதழின் மூலமாக வெளியிட்ட படைப்புகள் (கவிதைநூல்கள்) ஆகியனவும் தனிநூல்களாக வெளியிடப் பெற்றுள்ளன. இவை 'சங்கப் பதிப்பு' நூல்களாகக் குறிக்கப் பட்டுள்ளன.

**நூல் வெளியீடு:**

1. சங்கப்பிரசுரம் 2. செந்தமிழ்ப் பிரசுரம் 3. சங்கப்பதிப்பு என்றவாறு தமிழ்ச்சங்க வெளியீடுகளை மூன்று வகையாகப் பிரித்துக் காணமுடிகிறது.

1. **சங்கப்பிரசுரமாக 20 நூல்கள்**
2. **செந்தமிழ்ப் பிரசுரமாக 71 நூல்கள்**
3. **சங்கப்பதிப்பாக 12 நூல்கள் - ஆகியன**

இச்சங்கத்திலிருந்து வெளியிடப்பெற்ற நூல்களாகும். அத்துடன் நூல் வடிவமாக வெளியிடப்படாமல் செந்தமிழ் இதழ்களில் தொடர்ச்சியாக இடம்பெற்று முழுமை பெற்ற நூல்களும், முழுமை பெறாத நூல்களும் பல உள்ளன. இவ்வாறு அமைந்த இச்சங்கத்தின் நூல் வெளியீட்டுப் பணி 1951 ஆம் ஆண்டுவரை தொடர்ந்து காணப்படுகிறது.

செந்தமிழ் இதழும், மூன்றுவகைப் பதிப்புகளாக வெளிவந்த நூல்களும் ஆகிய யாவும் தமிழ்ச் சங்க அச்சுக்கூடமான பவர்பிரஸ் வாயிலாகவே அச்சாகியிருக்கின்றன. 1901 ஆம் ஆண்டு முதல் 1956 ஆம் ஆண்டுவரை இவ்வச்சகம் இயங்கி வந்ததையும், அதன் பின்னர் கருவிகள் பழுதடைந்ததால் அச்சகப் பணிகள் தொடர்ந்து நடைபெறவில்லை என்பதையும் அறிய முடிகிறது.

செந்தமிழ் இதழின் 52-தொகுதிகள் வரை தமிழ்ச்சங்க பவர்பிரஸ் அச்சகத்திலேயே அச்சிடப்பட்டிருக்கின்றன. அதன் பின்னர் தனியார் அச்சகத்தின் வழி, செந்தமிழ் இதழ்கள் அச்சாகி வெளிவருகின்றன. அச்சுக்கூடம் பழுதான பின்னர், தமிழ்ச்சங்கத்தின் நூல் வெளியீட்டுப் பணியிலும் தடங்கல் ஏற்பட்டது.

**பொன்விழா மலர்:**

1956 ஆம் ஆண்டில் தமிழ்ச்சங்கப் பொன்விழா ஏழுநாட்கள் கொண்டாடப் பெற்றது. ஒவ்வொருநாளும் நடைபெற்ற இயல்,இசை,நாடக நிகழ்ச்சிகளையும், தமிழறிஞர்களின் கருத்தரங்கக் கட்டுரைகளையும் தொகுத்துப் பொன் விழாமலர் ஒன்றைச் சங்கத்தார் வெளியிட்டனர். இவ்விழாவில், அறிஞர் பெருமக்கள் வாசித்தளித்த ஆய்வுரைகளில் பனிரெண்டைத் தேர்வு செய்து தமிழர் வாழ்வு என்னும் பெயரில் நூல் ஒன்றை வெளியிட்டுள்ளனர். இந்நூல் மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தின் இளங்கலை இளமறிவியல் பயிலும் மாணவர்க்குரிய பொதுத்தமிழ்ப் பாடத்திட்டத்தில் (1969-1972) சேர்க்கப் பெற்றது என்பது குறிப்பிடத்தக்கது.

கிடைத்தற்கரியதும் மிகப்பழமை வாய்ந்ததுமான நூல்களைப் பதிப்பித்து, தமிழ்மொழியின் சிறப்பை யாவரும் அறிய வேண்டும் என்ற எண்ணத்தின் காரணமாகப் பாண்டித்துரைத்தேவர், அச்சகத்தைத் தமிழ்ச்சங்கத்தின் உட்பிரிவுகளில் ஒன்றாகத் தோற்றுவித்தார். அவரது உயர்ந்த நோக்கம் நிறைவேறும் வகையில் சங்கத்தார், எவ்வாறேனும் நூல்களை வெளியிட்டு வருகின்றனர்.

## கல்விக்குழு

கல்லூரியின் கல்விப்பணிகள் அனைத்தயும் சிறப்பாக நடத்துவதற்கென பல்கலைக்கழக விதிகளுக்கு ஏற்பக் 'கல்விக்குழு' ஒன்று அமைக்கப் பெற்றது. இக்கல்விக்குழுவின் உறுப்பினர்களைத் தமிழ்ச்சங்கத்தின் ஆட்சிக்குழுவினர் தேர்ந்தெடுத்தனர்.

1957 ஆம் ஆண்டில்

**தலைவர் - திரு. தமிழவேள் பி.டி.இராசன்**

**செயலாளர் - திரு. கி.பழனியப்பன்**

**உறுப்பினர் - திரு. அவ்வை சு. துரைசாமிப்பிள்ளை**

**- திரு. ஆ. கார்மேகக் கோனார்**

**- திரு. டாக்டர் மா. இராசமாணிக்கனார்**

**- திரு. பேரா. அ.கி.பரந்தாமனார்**

**- திரு. முகம்மது சுல்த்தான்**

**- திரு. வி. சண்முகசுந்தரம்**

**- திரு. இரா.வே. நாராயணன்** (செந்தமிழ்க்கல்லூரி முதல்வர்)

ஆகிய ஒன்பது பேரும் கல்விக்குழு உறுப்பினராக இருந்து, கல்லூரி நலன் குறித்தும் மாணவர்களின் கல்வி நலன் குறித்தும் செயலாற்றினர்.

1976 ஆம் ஆண்டில் மதுரை காமராசர் பல்கலைக்கழக விதிகளின் படி தமிழ்ச்சங்கத்தின் ஆட்சிக்குழுவினரால் செந்தமிழ்க் கல்லூரிக்கென 'கல்லூரி ஆட்சிக்குழு' நிறுவப் பெற்றது. அவர்கள் கீழ் வருமாறு:

திரு.டி.பி.எம்.பெரியசுவாமி

திரு. மா. தனுக்கோடி பாண்டியன்

திரு. மா. சங்கரபாண்டியன்

திரு. டி.ஏ.தெய்வசிகாமணி

திரு. எஸ்.என்.முத்துமலைச்சாமி

திரு. கே. கந்தசாமி

திரு. வே.இ.பரசுராம்

திரு. இரா.வே.நாராயணன் (முதல்வர்)

திரு. பத்மா சீனிவாசன் ( துணைமுதல்வர்)

பல்கலைக்கழக நியமன உறுப்பினர்

கல்லூரி ஆட்சிக்குழுவினரால் செந்தமிழ்க் கல்லூரி, அதில் பயிலும் மாணவர்களின் முன்னேற்றம் தொடர்பான பணிகள் கவனித்து வரப் பெற்றன.

1990 ஆம் ஆண்டில், கல்லூரியின் செயலாளர் திரு.மா.தனுக்கோடி பாண்டியன் அவர்கள் தமிழ்ச்சங்கச் செயலாளராகப் பொறுப்பேற்ற காரணத்தால் திரு. மா.சங்கரபாண்டியன் அவர்கள் கல்லூரியின் செயலாளரானார். மீனாட்சி மிசன் மருத்துவமனையின் தாளாளர் டாக்டர். ந. சேதுராமன் அவர்கள் கல்லூரி ஆட்சிக்குழுவின் தலைவர் பொறுப்பேற்றார்.

1992 ஆம் ஆண்டில் கல்லூரி ஆட்சிக்குழுவில்,

| | | |
|---|---|---|
| **தலைவர்** | - | **டாக்டர் ந. சேதுராமன்** |
| **செயலாளர்** | - | **திரு. மா. சங்கரபாண்டியன்** |
| **உறுப்பினர்கள்** | - | **திரு. மா.தனுக்கோடி பாண்டியன்** |
| | | **முனைவர் அ. தட்சிணாமூர்த்தி(கல்லூரி முதல்வர்)** |
| | | **திரு. கே. கந்தசாமி பி.ஏ., பி.எல்.,** |
| | | **திரு. ஆ. ஆண்டியப்பத்தேவர்** |
| | | **திரு. ஆர். பரங்குன்றம்** |
| | | **முனைவர். நா. பாலுசாமி** |
| | | **திரு. பொன். விசயன் (கல்லூரிப் பேராசிரியர்)** |
| | | **முனைவர். கிரிஜா பிரியதர்சினி(கல்லூரிப் பேராசிரியர்)** |
| | | **பல்கலைக்கழக நியமன உறுப்பினர்** |

ஆகிய பதினொருவர் சேர்ந்த உறுப்பினர் இடம் பெற்றிருந்தனர்.

கல்லூரி, தோற்றம் பெற்றபோது வித்யா விசய ஆலோசனை சபை என்றும், வித்துவக்கழகம் என்ற பெயரில் இயங்கி வந்த இக்குழு 1957 ஆண்டிற்குப் பின்னர் கல்விக்குழு என்றும், கல்லூரி ஆட்சிக்குழு என்றும், கல்லூரிக்குழு என்றும் அழைக்கப்பட்டது. 2005 ஆம் ஆண்டின் கல்லூரிக்குழு உறுப்பினர்களாக உள்ளவர்கள்:-

| | | |
|---|---|---|
| **தலைவர்** | - | **டாக்டர் ந. சேதுராமன்** |
| **கல்லூரிச்செயலாளர்** | - | **திரு. மா. சங்கரபாண்டியன்** |
| **உறுப்பினர்கள்** | - | **திரு. இரா. அழகுமலை** |
| | | **திரு. முருகதாஸ் தீர்த்தபதி** |
| | | **திரு. இராணி இலட்சுமி நாச்சியார்** |
| | | **திரு. எஸ். பரங்குன்றம்** |
| | | **திரு. இரா. குருசாமி** |

உறுப்பினர்கள் - திரு.மா.ச.கார்த்திகேய பாலாஜி
திரு. க.முத்தையா பசும்பொன்
திரு. வாசுகி ராஜா
திரு. ஆர்.கண்ணன்
திரு. மா.ச.மாரியப்ப முரளி
முனைவர் க. சின்னப்பா (கல்லூரி முதல்வர்)
முனைவர் வீ. காந்திமதி (இணைப்பேராசிரியர்)
முனைவர் செ. தனலக்குமி (இணைப்பேராசிரியர்)
பல்கலைக் கழக நியமன உறுப்பினர்

தமிழ்ச்சங்க ஆட்சிக்குழுவினர்களில் பலர் கல்லூரிக்குழு உறுப்பினராக இருந்து சங்கத்தின் சிறப்பான செயல்பாடுகளிலும், கல்லூரியின் வளர்ச்சியிலும் அக்கறை கொண்டோராகப் பணியாற்றி வருகின்றனர் என்பதை அறியமுடிகிறது. இவர்களுடன் செந்தமிழ்க் கல்லூரியின் முதல்வரும், இரண்டு பேராசிரியர்களும் பல்கலைக்கழக உறுப்பினரும் இணைந்துள்ளனர். கல்லூரி நலனிலும் மாணவர்களின் கல்வியிலும், ஆசிரியர்கள் அலுவலர் நலனிலும் அக்கறை கொண்டோராக கல்லூரிக்குழு உறுப்பினர்கள் செயல்பட்டு வருகின்றனர்.

செந்தமிழ்க் கல்லூரியின் அனைத்து வளர்ச்சிகளிலும் பெரும்பங்கு வகித்த செயலாளர் திரு. மா.சங்கரபாண்டியன் அவர்களின் மறைவிற்குப் பிறகு, 2006 ஆம் ஆண்டு ஜூலைத் திங்களிலிருந்து திரு. இரா.குருசாமி. அவர்கள் கல்லூரியின் செயலாளராக பொறுப்பேற்றுப் பணியாற்றி வருகிறார்.

## செந்தமிழ்க் கல்லூரி

உயர்தனிச் செம்மொழியாம் நந்தமிழின் வளர்ச்சிக்கெனவே தோன்றிய நான்காம் தமிழ்ச்சங்கத்தின் உயிர்நாடியாகச் செந்தமிழ்க் கல்லூரி செயலாற்றிக் கொண்டிருக்கிறது. இச்சங்கம் தோன்றிய (14.09.1901) நாளில் செந்தமிழ்க் கல்லூரியும் தொடங்கப்பெற்று இன்று வரை (2006) தொய்வின்றிப் பணியாற்றி வருகிறது. ஒரு பல்கலைக் கழகத்தைப் போலத் தனிநிறுவனமாக இயங்கி வந்த இக்கல்லூரி, 1957ஆம் ஆண்டு சூலைத்திங்கள் பத்தாம் நாளில் சென்னைப் பல்கலைக்கழகத்துடன் இணைக்கப்பெற்றது. தற்போது மதுரை காமராசர் பல்கலைக்கழகத்துடன் இணைக்கப் பெற்று, தாய்மொழிக்கல்வி

ஒன்றையே உயர்நோக்கமாகக் கொண்டு இயங்கிவரும் ஒரே கல்லூரியாக விளங்குகிறது.

**கல்விமுறை:**

சென்னைப் பல்கலைக்கழகத்தின் பாடத்திட்டத்தின் படி, வித்துவான் பட்டபடிப்பு செந்தமிழ்க் கல்லூரியில் அமைக்கப்பட்டது. வித்துவான் முதனிலை - இரண்டு ஆண்டுகளும், வித்துவான் இறுதிநிலை இரண்டு ஆண்டுகளுமாக நான்காண்டுக் கல்வியாக இப்பட்டபடிப்பு அமைந்தது. மதுரை காமராசர் பல்கலைக் கழகம் தொடங்கியபின்னர், இப்பல்கலைக்கழகத்தின் கீழ் செந்தமிழ்க் கல்லூரி செயல்படலாயிற்று. மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தின் விதிமுறைகளுக்கு ஏற்ப, 1968-69 ஆம் கல்வியாண்டில் புகுமுக(P.U.C) வகுப்பு தொடங்கப்பெற்றது. அதுவே இளங்கலை (பி.ஏ.) சிறப்புத்தமிழ் பட்டவகுப்பாக வளர்ச்சிபெற்றது. 1969-70 ஆம் ஆண்டில் இளங்கலை பட்டவகுப்பு (பி.ஏ) தொடங்கப் பெற்றுத் தொடர்ந்து நடைபெற்று வருகிறது.

வித்துவான் பட்டபடிப்பும் நான்காண்டிற்கு உரியது. இளங்கலை பட்டம் பெறுவதற்கும் (புகுமுக வகுப்பு-ஓராண்டு, பி.ஏ.-மூன்று ஆண்டுகள்) நான்காண்டுகள் பயில வேண்டும். புகுமுக வகுப்பு இளங்கலை பட்ட வகுப்பு ஆகியவற்றிற்கு, பகுதி I -பொதுத்தமிழ், பகுதி II - ஆங்கிலம், பகுதி III -சிறப்புத்தமிழ் என்றவாறு பாடங்கள் அமைந்தன. செந்தமிழ்க் கல்லூரியை ஒரு கலைக்கல்லூரியாக (Arts College ) உயர்த்துவதற்காக, இக்கல்லூரியின் பெயரில் ஓர் அறக்கட்டளை நிறுவ வேண்டும் என்னும் மதுரைப்பல்கலைக் கழகத்தின் கோரிக்கையைத் தமிழ்ச்சங்க ஆட்சிக்குழுவினர் ஏற்றனர். 1969 ஆம் ஆண்டில் அறக்கட்டளை (Endowment) ஒன்றை ஏற்படுத்தினர். ஆங்கிலப் பேராசிரியரையும் பணியமர்த்தினர்.

ஏற்கெனவே கல்லூரியில் பயிற்றுவிக்கப்படும் வித்துவான் (புலவர்) பட்டப்படிப்பிற்குரிய கல்வி நிலையை ஓரியண்டல் (கீழ்த்திசை) கல்லூரி என்றும், புகுமுக வகுப்பு, இளங்கலை சேர்ந்த கல்வி நிலையைக் கலைக்கல்லூரி என்றும் பிரித்து இரண்டுவகைக் கல்லூரிகள் 1969 ஆம் ஆண்டு முதல் செயல்படத் தொடங்கின. பாண்டித்துரைத்தேவர் உருவாக்கிய செந்தமிழ்க் கலாசாலை இப்போது பல்கலைக் கழக இணைப்புப் பெற்ற செந்தமிழ் ஓரியண்டல் கல்லூரி (Oriental college), செந்தமிழ்க் கலைக்கல்லூரி (Arts College) என்ற இரண்டு வகைக் கல்லூரிகளாக வளர்ச்சி பெற்றுள்ளது.

1976-1977 ஆம் கல்வியாண்டு முதல் வித்துவான் (புலவர்) பட்டப்படிப்பு, மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தாரின் ஆணைப்படி பி.லிட் பட்டப்படிப்பாக (B.Litt.Degree) மாறியது. இக்கல்வியும் நான்காண்டுகள் வரை பயிலும் கல்வியாகும். பின்னர் உயர்நிலைப் பள்ளிகள் ( 11ஆம் வகுப்பு வரை) மேனிலைப் பள்ளிகளாக (10+2) ஆன போது, 1979-1980 ஆம் கல்வியாண்டிலிருந்து பி.லிட் பட்டக்கல்வியும் மூன்றாண்டு காலம் கற்கும் படிப்பாக மாறியது. புகுமுக வகுப்பு 12-ஆம் வகுப்பாக மேனிலைப் பள்ளிகளில் இணைந்த பின்னர், கல்லூரிகளில் பட்டப்படிப்புகள் யாவும் மூன்றாண்டுக் கல்வியாக இருந்ததைப் போல பி.லிட் பட்டப்படிப்பும் மூன்றாண்டுக்குரியதாக ஆனது.

1979-1980 ஆம் கல்வியாண்டில் மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தின் ஆய்வுக்குழுவினர் செந்தமிழ்க் கல்லூரியின் தகுதிகளை ஆராய்ந்து, முதுகலைப் பட்டவகுப்பு (M.A..Degree) தொடங்குவதற்கு அனுமதியளித்தனர். இளம் இலக்கியம் (பி.லிட்), இளங்கலை(பி.ஏ), முதுகலை(எம்.ஏ) ஆகிய பட்டப்படிப்புகள் யாவும் பல்கலைக் கழகத் திட்டத்தின் படி இக்கல்வியாண்டிலிருந்து பருவமுறைக் கல்வியாகப் (Semester) பயிற்றுவிக்கப்படுகின்றன.

1986-1987 ஆம் கல்வியாண்டில் ஆய்வுக் கல்வியாகிய எம்ஃபில் (M.Phil) பட்டப் படிப்பும் தொடங்கப் பெற்றது. ஓராண்டுக்கால எல்லையில் பயிலும் எம்ஃபில் ஆய்வுப் பட்டப் படிப்பும் பருவமுறைக் கல்வியாகப் பயிற்றுவிக்கப்படுகிறது. கல்லூரி ஆட்சிக்குழுவினரின் சீரிய முயற்சியால் 2003-2004 ஆம் கல்வியாண்டில் உயராய்வு செய்து பேரறிஞர்களை உருவாக்கும் பிஎச்.டி பட்டம் பெறுவதற்குரிய உயராய்வு மையம் (Research Centre) தொடங்கப் பெற்றது.

பல்கலைக் கழக இணைப்புப் பெற்றபின்னர் இந்த ஐம்பது ஆண்டுகள் வரலாற்றில் (1957-2006) செந்தமிழ் ஓரியண்டல் கல்லூரி, செந்தமிழ்க் கலைக் கல்லூரி ஆகிய இரண்டுவகைக் கல்லூரிகளுடன் உயராய்வு மையமாகவும் திகழும் இக்கல்லூரி, தாய்மொழியாம் தமிழ்மொழியைப் பயிற்றுவித்தல் ஒன்றனையே தம் உயரிய நோக்கமாகக் கொண்டு இயங்கிவருகிறது.

**<u>கல்லூரி முதல்வர்கள்:</u>**

1957-ஆம் ஆண்டிலிருந்து செந்தமிழ்க் கல்லூரியின் முதல்வராகப்

பணியாற்றிய பெருந்தகையாளர்கள்:

திரு. இரா.வே. நாராயணன் பி.ஓ.எல் அவர்கள் 1957 ஆம் ஆண்டு முதல் 1986 ஆம் ஆண்டுவரை 30 ஆண்டுகாலம் முதல்வராகப் பணி செய்தார்.

1986-ஆம் ஆண்டுமுதல் 1991-ஆம் ஆண்டு வரை பேராசிரியர் கு. துரைராஜ் எம்.ஏ.எம்ஃபில் அவர்களும்

1991-ஆண்டு முதல் 1996-ஆம் ஆண்டு வரை முனைவர் அ.தட்சிணாமூர்த்தி, எம்.ஏ.,எம்ஃபில், பிஎச்டி அவர்களும்

1996-ஆம் ஆண்டுமுதல் 2004-ஆம் ஆண்டு வரை முனைவர். செ.கந்தசாமி எம்.ஏ, பிஎச்.டி அவர்களும் செந்தமிழ்க் கல்லூரி முதல்வர்களாகத் தம் உழைப்பை நல்கிப் பணி ஓய்வு பெற்றனர்.

2004-2005 ஆம் கல்வியாண்டில் இருந்து முனைவர்.க.சின்னப்பா எம்.ஏ.,பிஎச்.டி அவர்கள் கல்லூரி முதல்வராகப் பணியாற்றி வருகிறார்..

## பல்கலைக்கழக மானியக்குழுவின் (UGC) நிதியுதவி

செந்தமிழ்க்கல்லூரி தற்போது இருபாலர் பயில்கின்ற கல்லூரியாக விளங்குகின்றது. அரசு உதவிபெறும் கல்லூரியாக 2F மற்றும் 12B வரிசையில் இடம் பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கது. புது டெல்லியில் உள்ள பல்கலைக்கழக மானியக்குழு (UGC, New Delhi) வின் பல்வேறு திட்டக்காலங்களிலும் நிதியுதவி பெற்று வருகின்றது. கணிப்பொறி, நூலகங்கட்கான புத்தகங்கள் வாங்குவதற்கு நிதியுதவி பெற்றுள்ளதும் குறிக்கத்தக்கது. மேலும், இளங்கலைத் துறை மேம்பாடு (UG-Grants), முதுகலைத்துறை மேம்பாடு (PG-Grants), உயர்கல்வி பயிலச் செல்வோருக்குச் சம்பளத்துடன் கூடிய அனுமதி, பதிலி ஆசிரியர்கட்கு ஊதியம் மற்றும் அடித்தளக் கட்டமைப்பிற்கான நிதியுதவிகளையும் பல்கலைக்கழக மானியக்குழு (UGC) மூலம் பெற்றுள்ளது.

## தேசியத்தர மதிப்பீட்டுக்குழு (NAAC)

பல்கலைக்கழக மானியக்குழுவானது, தேசிய அளவில், கல்லூரி,பல்கலைக்கழகங்களின் கல்வி மற்றும் செயல்திறனை மதிப்பீடு செய்வதற்கென்று தேசியத்தர மதிப்பீட்டுக்குழுவை தேசியத்தர மதிப்பீட்டுக்குழு ( National Assesment and Accreditation

Council ) என்ற பெயரில் 1994 ஆம் ஆண்டு உருவாக்கி உள்ளது. இது ஒரு தன்னாட்சி பெற்ற நிறுவனம் ஆகும். இதன் தலைமையகம் பெங்களூரில் உள்ளது.

செந்தமிழ்க்கல்லூரியும் தேசிய அளவில் தரவரிசைப்பட்டியல் பெறுவதற்காக டாக்டர் க.சின்னப்பா (கல்லூரி முதல்வர்), செந்தமிழ்க் கல்லூரித் தேசியத்தரக்குழு (NAAC) ஒருங்கிணைப்பாளர் டாக்டர் திருமதி மு.மீனா ஆகியோர் அடங்கிய குழு, செந்தமிழ்க்கல்லூரி பற்றிய சுயமதிப்பீட்டுக் கல்லூரிக் கல்வி அறிக்கை (volume-1,2) யினைத் தயார் செய்து பெங்களூரில் உள்ள தேசியத்தர மதிப்பீட்டுக்குழுவிடம் 17-05-2006 இல் சமர்ப்பித்தது. கன்னடப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் டாக்டர் B.A. விவேகராய், மும்பை சோமையா கல்லூரி முதல்வர் டாக்டர் K. வேங்கடரமணி, ஆந்திரப்பிரதேச கல்லூரிக் கல்வித்துறை இயக்குநர் டாக்டர் K.V. இரமணா ராவ், திரு. B.S. பொன்முடிராஜ், பெங்களூர் தேசியத்தர மதிப்பீட்டுக்குழு ஒருங்கிணைப்பு அதிகாரி ஆகியோர் அடங்கிய முன்னணி அறிஞர் குழுவை, செந்தமிழ்க் கல்லூரியை மதிப்பீடு செய்ய NAAC நியமித்தது, இக்குழுவானது ஆகஸ்ட் மாதம், 3 மற்றும் 4 ஆகிய இருநாட்கள் கல்லூரியில் முகாமிட்டது. அவ்வமயம்,

1. பாடத்திட்டத்தின் நிலை
2. கல்வி கற்பித்தல், கற்றல் மற்றும் மதிப்பீடு
3. ஆராய்ச்சி, ஆலோசனை மற்றும் விரிவாக்கப்பணி
4. உள்கட்டமைப்பு மற்றும் கற்பதற்கான ஆதாரத்தன்மை
5. மாணவர்களின் ஆதரவும் முன்னேற்றமும்
6. கல்லூரியின் ஒழுங்கமைதியும் நிர்வாகமும்
7. ஆரோக்கியமான பயிற்சிகள்

ஆகிய ஏழு நிலைகளில் அடியொற்றித் தயாரிக்கப்பட்ட கல்லூரிச் சுயகல்வி மதிப்பீட்டறிக்கையின் (Self Study Report, volume 1,2) சிறப்பம்சங்களை நேரிடையே ஒவ்வொரு பிரிவு அடிப்படையில் மதிப்பீடு செய்தனர். மதிப்பீட்டின் முடிவில் அவர்களுடைய மதிப்பீட்டு அறிக்கையைக் கல்லூரி முதல்வர், ஒருங்கிணைப்பாளர், கல்லூரித்தலைவர், செயலாளர்கள் குழுவினரிடம் வழங்கினர்.

பின்னர், தேசியத்தர மதிப்பீட்டுக்குழுவினர் இடம் பெற்ற நிர்வாகக்குழுவில் (Executive Committee) முறையாகப் பரிசீலித்து, செந்தமிழ்க் கல்லூரிக்கு $B^+$ (75%-80%) என்னும் தரவரிசையினைத் தேசிய அளவில் வழங்கியுள்ளனர்.

## ஆசிரியர், அலுவலர்கள்:

கல்லூரி முதல்வர் ***டாக்டர் க.சின்னப்பா***, எம்.ஏ, பிஎச்.டி., அவர்களின் தலைமையின் கீழ், தமிழ்த்துறையில் பதினொருவரும், ஆங்கிலத்துறையில் ஒருவருமாகப் பன்னிரு பேராசிரியர்களும், இவர்களுடன் நூலகர் ஒருவரும் இணைந்து கல்விப்பணியில் முனைப்புடன் செயலாற்றி வருகின்றனர்.

| | | |
|---|---|---|
| பேராசிரியர் | - | பொன்.விசயன் எம்.ஏ |
| முனைவர் | - | சி. மொ. இராஜேந்திரன் எம்.ஏ, பிஎச்.டி., |
| முனைவர் | - | வீ. காந்திமதி, எம்.ஏ, பிஎச்.டி., |
| பேராசிரியர் | - | க. செயமூர்த்தி எம். ஏ., |
| முனைவர் | - | செ. தனலக்குமி எம்.ஏ, பிஎச்.டி., |
| முனைவர் | - | சி. சுந்தரி எம்.ஏ, பிஎச்.டி., |
| முனைவர் | - | ஜி.டி.நிர்மலா எம்.ஏ, எம்.ஃபில், பிஎச்.டி., |
| முனைவர் | - | ப. பழனியம்மாள் எம்.ஏ, பிஎச்.டி., |
| முனைவர் | - | சு. விசயன் எம்.ஏ, எம்.ஃபில், பிஎச்.டி., |
| முனைவர் | - | மு. மீனா எம்.ஏ, எம்.ஃபில், எம்.எட்.,பிஎச்.டி., |
| பேராசிரியை | - | ஜ. ஹேமா எம்.ஏ, எம்.ஃபில், |

ஆகிய பேராசிரியர்கள் தமிழ்த்துறையிலும், திரு.பா.முருகேசன் எம்.ஏ.,பி.லிப்.சயின்ஸ்.,தேர்வுநிலைநூலகராகவும் **பேராசிரியர் T.K.மோகன் ராம்** எம்.ஏ, எம்.ஃபில், ஆங்கிலத்துறையிலும் பணியாற்றி மாணவர்களின் தலைசிறந்த வெற்றிக்குப் பெருந்துணை புரிகின்றனர்.

கல்லூரி அலுவலகத்தில் உதவியாளர் திரு. கா.மனோகரன், திருமதி. ஆ. இராசேசுவரி இ.நி.உ.,திரு.ம.ஜெயச்சந்திரன் இ.நி.உ, திரு. சு. மூர்த்தி இ.நி.உ, திரு. மு. சக்திக்குமார் கணினி தட்டச்சர் ஆகியோரும், இவர்களுக்குத் துணையாக திருமதி.கோ.குருவம்மாள், திருமதி.சி.தமிழரசி, திருமதி.ம.மாலதி ஆகியோரும் பணியாற்றுகின்றனர்.

## மாணவ-மாணவியர் :

"என் கடன் பணி செய்து கிடப்பதே" - என்ற அப்பர் சுவாமிகளின் கூற்றைத் தாரக மந்திரமாகக் கொண்டு, கல்லூரியில் பயிலும் மாணவ மாணவியரைக் கல்வி கேள்விகளில் முன்னேற்றும் பணியை முதற்பணியாகக் கருதிப் பேராசிரியர்கள் பணியாற்றுகின்றனர். அதனால் பல்கலைக்கழகத்தின் தரவரிசைப் பட்டியலில் முதலிடத்தைப்

பெறுகின்ற தகுதியினை இக்கல்லூரி மாணவர்கள் பலமுறை பெற்றிருக்கிறார்கள். ஒழுக்கமும், கட்டுப்பாடும், சுயதிறமைகளை வளர்த்துக் கொள்ளும் அறிவும் மிக்க மாணவ-மாணவியர், தாம் பெறும் தமிழ்க் கல்வியின் மூலமாக எதிர்கால வாழ்விலும் சிறந்து விளங்குவதற்கு இக்கல்லூரியும், பயிலும் பாடங்களும் பெருந்துணைபுரிகின்றன.

| | | |
|---|---|---|
| பி.லிட் I | - | 58+8=66 |
| பி.லிட் II | - | 56 |
| பி.லிட் III | - | 52 |
| பி.ஏ I | - | 25 |
| பி.ஏ II | - | 45 |
| பி.ஏ. III | - | 48 |
| எம்.ஏ. I | - | 31 |
| எம்.ஏ. II | - | 36 |
| எம்ஃபில் | - | 45 |
| பிஎச்.டி | - | 20 |
| மொத்தம் | - | 424 |

தற்போது (2006) கல்லூரியில் பயிலும் மாணவர்களின் எண்ணிக்கையை நோக்கும்போது, கல்லூரியின் சிறப்பும், தமிழிலக்கியங்களைக் கற்கும் கல்வியின் உயர்வும் தெளிவாக விளங்குகிறது.

<u>**சான்றிதழ்ப் படிப்புகள்:**</u>

தமிழ்த் துறை சார்ந்த கல்வியைப் பயிலும் செந்தமிழ்க் கல்லூரி மாணவ - மாணவியர் தங்கள் அறிவையும், அனுபவத்தையும் மேம்படுத்தும் வகையில் சான்றிதழ்ப் படிப்புகளும் இக்கல்லூரியில் தொடங்கப் பெற்று நடைபெற்று வருகின்றன.

பழந்தமிழ் எழுத்துகளின் வரி வடிவத்தையும், எழுத்தமைப்பையும், காலந்தோறும் மாற்றம் பெற்ற எழுத்து வடிவையும் அறிந்து கற்று அதற்கெனச் சான்றிதழ் பெறும் வகையில் 'ஓலைச்சுவடியியல்' என்னும் கல்வி 2004ஆம் ஆண்டிலிருந்து இக்கல்லூரியில் நடைபெற்று வருகிறது. தொல்பொருள் ஆய்வுத் துறையில் பணியாற்றும் அறிஞர், ஓலைச்சுவடியியலைக் குறித்துப் பாடம்

நடத்தி, தமிழ்மொழி சார்ந்த ஒரு புதுத் துறையினை மாணவர்களுக்கு அறிமுகப்படுத்துகிறார். பழையகாலத்தில் உள்ள கல்வெட்டுக்களின் எழுத்தை வாசிக்கவும் கற்றுக் கொடுத்துச் சான்றிதழ் வழங்கப்படுகிறது. மாணவ-மாணவியரின் நலன் கருதி யோகா சான்றிதழ் வகுப்பும் நடைபெற்று வருகின்றது.

பழைய மொழிகளில் ஒன்றான வடமொழி (சமஸ்கிருதம்)யின் இயல்புகளையும், அம்மொழி எழுத்துகளையும், சமஸ்கிருத நூல்களைக் கற்கும் திறத்தையும் கற்றுக் கொடுக்கின்ற 'சமஸ்கிருதப் பாடவகுப்பு' செந்தமிழ்க் கல்லூரியில் 2005-இல் தொடங்கப் பெற்று நடைபெற்று வருகிறது. இந்தியத்தாயின் வலக்கண்ணாகத் திராவிடமும் குறிப்பாகத் தமிழும், இடக்கண்ணாக வடமொழியும் (சமஸ்கிருதம்) இருப்பதாகப் பேராசிரியர் சுந்தரம் பிள்ளை, தமது மனோன்மணியத்தில் குறிப்பிட்டுளள்ார். சங்கம் தோற்றம் பெற்ற போது செந்தமிழ்க் கல்லூரியில் தமிழுடன் வடமொழியும் கற்பிக்கப்பட்டது. இப்போது தமிழ் பயிலும் மாணவர்கள் சமஸ்கிருதத்தையும் தெரிந்து கொள்ளவேண்டும் என்ற உயர்ந்த நோக்கத்தில், இவ்வகுப்பு நடைபெற்று வருகிறது. வாரந்தோறும் ஓரிருநாட்கள் சமஸ்கிருத வகுப்பு நடத்தப்படுகிறது. இதில் பயிலும் மாணவர்களுக்குச் சான்றிதழ் வழங்கப்படுகிறது.

## கருத்தரங்குகள்

செந்தமிழ்க்கல்லூரியில் மாணவர்களின் நலன் கருதியும், தமிழ்மொழி, இலக்கிய மாண்புகளைப் பரப்பும் வகையிலும் கருத்தரங்குகளுக்கு ஏற்பாடு செய்யப்படுகின்றன.

பிறகல்லூரிகளுடனும், சாகித்ய அகாடமி, திருமலை திருப்பதி தேவஸ்தானம் போன்ற அமைப்புகளுடனும் இணைந்து கருத்தரங்குகள் நடத்தப்பட்டன.

எம்.ஃபில், பிஎச்.டி மாணவர்கள் தங்களின் ஆய்வு மேம்பாடடையவும், ஆய்வு வட்டங்களில் கட்டுரைகள் வாசித்தளித்து சிறப்படையவும் பாண்டித்துரைத்தேவர் கருத்தரங்க ஆய்வகம் பெரும் பயனுடையதாக விளங்குகின்றது.

வாரந்தோறும் ஆசிரியர்களாலும், வெவ்வேறு தலைப்புகளில் ஆய்வுக்கட்டுரைகள் வாசித்தளிக்கப்படுகின்றன. இக்கட்டுரைகள், செந்தமிழ் இதழிலும், ஒரு சேரத்தொகுத்து நூல்வடிவிலும் வெளியிடப்பட்டு வரும் நிலை உருவாகி வருகின்றது.

# செந்தமிழ் இதழ்

துறைதோறும் துறைதோறும் தமிழ்மொழிக்குச் செய்யவேண்டும் நல்ல தொண்டு என்ற நோக்கத்தில் செந்தமிழ் என்னும் திங்களிதழ் தொடங்கப்பெற்றது. 1902-ஆம் ஆண்டு டிசம்பர் 7-ஆம் நாள் செந்தமிழ் இதழின் முதல் பகுதி வெளிவந்தது. அன்றிலிருந்து இன்று வரை தேர்ந்த செவ்வையான ஆராய்ச்சிக் கட்டுரைகளைக் கொண்டதாக இவ்விதழ் வெளியிடப்படுகின்றது.

**செந்தமிழ் இதழின் நோக்கம்:**

- இதுவரை அச்சிடப்படாத தமிழ்நூல்கள், தமிழ்நாட்டுப் புராதன சரிதங்கள், சாசனங்கள் ஆகியவற்றை வெளியிடல்.
- வடமொழியினின்றும் ஆங்கிலத்தினின்றும் தமிழுக்கு வேண்டுவனவாகக் கருதப்படும் நூலின் மொழி பெயர்ப்புகளைத் தருதல்.
- மொழி ஆராய்ச்சி, இலக்கிய ஆராய்ச்சிகளை மேற்கொள்ளல்.
- தமிழின் அருமை,பெருமை அடங்கிய செய்திகளை வெளியிடல்.
- வரலாறு, நீதி, ஒழுக்கம், சமயம் பற்றிய ஆராய்ச்சிக் கட்டுரைகளை வழங்கல்.
- தமிழ் வளர்ச்சிக்கு வேண்டுவனவாகிய பிறமுயற்சிகளை வெளியிடல்.

செந்தமிழின் முதல் இதழ் முகவுரையில் அப்போது இதழாசிரியராக இருந்த ரா.இராகவையங்கார் எழுதிவைத்த குறிப்புகளிலிருந்து, செந்தமிழ் இதழ் தொடங்கப்பட்டதன் காரணத்தையும், அதன் நோக்கங்களையும் அறிந்து கொள்ளலாம்.

**செந்தமிழ் ஆசிரியர்கள்:**

செந்தமிழ்க் கல்லூரியின் தலைமை ஆசிரியர்கள், இதழாசிரியர்களாகவும் பணியாற்றிச் செந்தமிழ் இதழிற்கும், நூலாய்வுகளுக்கும் பெருந்துணைபுரிந்தனர். 1971-ஆம் ஆண்டிலிருந்து தமிழ்ச்சங்கத்தின் செயலாளர்களே இதழாசிரியர்ப் பொறுப்பையும் ஏற்றனர்.

| | | |
|---|---|---|
| திரு. டி.பி.எம். பெரியசுவாமி | - | 1975 முதல் 1983 வரை |
| திரு. என்.எஸ். முத்துமலைச்சாமி | - | 1984 முதல் 1986 வரை |
| திரு. மா. தனுக்கோடி பாண்டியன் | - | 1987 முதல் 2000 வரை |
| திரு. இரா. அழகுமலை | - | 2001 முதல் இன்றுவரை |

என்றவாறு சங்கச் செயலாளர்கள் செந்தமிழ் ஆசிரியர்களாகப் பணியாற்றியுள்ளனர். இவர்களுக்கு உறுதுணையாகப் பதிப்பாசிரியர் குழுவும் அமைக்கப் பெற்றுள்ளது. இக்குழுவில் தமிழறிஞர்களும், பேராசிரியர்களும் இடம் பெறுகின்றனர். 1978-ஆம் ஆண்டில் செந்தமிழ் ஆசிரியர் குழுவில் இடம் பெற்ற அறிஞர்கள்,

முனைவர். சுப. அண்ணாமலை
முனைவர். கோ. விசய வேணுகோபால்
முனைவர். பழனி அரங்கசாமி
புலவர். இரா. இளங்குமரன்

ஆகிய நால்வர் ஆவர்.

1984-ஆம் ஆண்டில்

| | | |
|---|---|---|
| தலைவர் | - | முனைவர். பழனி அரங்கசாமி |
| துணைத்தலைவர் | - | திரு. சாமிஅய்யா |
| உறுப்பினர் | - | புலவர். இரா.இளங்குமரன்<br>புலவர். தி.கி. சுந்தரமூர்த்தி |
| கன்வீனர் | - | சங்கச் செயலாளர் |

என்றவாறு செந்தமிழ் ஆசிரியர்குழு மாற்றி அமைக்கப் பெற்றது.

1991-ஆம் ஆண்டில் முதுபெருந் தமிழ்ப் பேராசிரியரும், பேச்சாற்றிலில் வல்லவருமான பேரறிஞர். நா. பாலுசாமி அவர்களைத் தமிழ்ச்சங்கச் செயலாளருடன் இணைந்து செந்தமிழின் ஆசிரியராகப் பணியாற்ற சங்க ஆட்சிக்குழு தேர்வு செய்தது. இவர் 2000-ஆம் ஆண்டு வரை செந்தமிழ் ஆசிரியர் பொறுப்பு வகித்தார். இவர்களுடன், தமிழ்நாட்டின் தலைசிறந்த பேராசிரியர்களும், பிறதுறை அறிஞர்களும் ஆசிரியர் குழுவில் இடம் பெற்றனர்.

பேரறிஞர் தமிழண்ணல்'
பேரறிஞர் செ.கந்தசாமி (கல்லூரி முதல்வர்)
பேரறிஞர் பழனி அரங்கசாமி

பேரறிஞர் ம.ரா.போ. குருசாமி
பேரறிஞர் ச. மெய்யப்பன்
பேரறிஞர் சி. கதிர்மகாதேவன்
பேரறிஞர் கு. திரைராசு (முன்னாள் முதல்வர்)
பேரறிஞர் அ.அ. மணவாளன் (உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்)
பேரறிஞர் ந. பொன்னப்பன்
பேரறிஞர் பத்மா சீனிவாசன் (ஆங்கிலத்துறை)
பேரறிஞர் ந. மாணிக்கம்
பேரறிஞர் வி. சரசுவதி வேணுகோபால்
பேரறிஞர் எஸ்.எம். கமால்
பேரறிஞர் ஈ.கே. இராமசாமி
[illegible]

ஆகிய தமிழுலகு அறுந்த பேரறிஞர்கள் செந்தமிழாசிரியர் குழுவில் இடம் பெற்றிருந்தனர்.

2001-ஆம் ஆண்டில் பேராசிரியர் இரா.சதாசிவம் அவர்கள் சங்கச் செயலாளரான திரு. இரா.அழகுமலை அவர்களுடன் இணைந்து செந்தமிழ் இதழின் பொறுப்பாசிரியர் பணியினை ஏற்றார். இவ்விருவரது சீரிய முயற்சியில் செந்தமிழ் இதழ், சிறப்பும் செம்மையும் பெற்று வெளியிடப்படுகின்றது. இவர்களுக்குத் துணையாக இவ்வாண்டில் (2006),

முனைவர். தமிழண்ணல்
புலவர். இரா. இளங்குமரன்
டாக்டர் ந. சேதுராமன்
முனைவர். சுப. அண்ணாமலை
முனைவர். ம.ரா.போ. குருசாமி
முனைவர். அ.அ. மணவாளன்
முனைவர். அ.தட்சிணாமூர்த்தி
இராசா திரு. T.N.S. முருகதாஸ் தீர்த்தபதி
முனைவர். செ. கந்தசாமி
முனைவர். க. சின்னப்பா (கல்லூரி முதல்வர்)

ஆகிய பதின்மர் சேர்ந்த செந்தமிழ் ஆசிரியர்குழு அமைந்துள்ளது.

<u>திங்களிதழ்:</u>

திங்கள்தோறும் வெளிவரும் பகுதிகளைக் கொண்டு ஓர் ஆண்டு முழுமைக்குமான 12 பகுதிகள் ஒரு தொகுதியாக வெளியிடப்படுகின்றது.

அவ்வாறு ஓர் ஆண்டிற்கு ஒரு தொகுதியாக வெளியிடப் பெற்ற செந்தமிழ் இதழ், இதழ் வெளியீட்டில் சில தடைகள் ஏற்பட்டதால், 1976-ஆம் ஆண்டில் 71-ஆம் தொகுதியும், ஈராண்டிற்குப் பின்னர் 1978-ஆம் ஆண்டில் 72-ஆம் தொகுதியும் வெளிவந்தன.

திங்கள் ஒரு முறை வெளியான செந்தமிழ் இதழ், 1963-68-ஆம் ஆண்டு முதல், 63-ஆம் தொகுதி முதல் மூன்று திங்கட்கு ஒருமுறை, காலாண்டு இதழாக ஆண்டிற்கு நான்கு பகுதிகளாக வெளியிடப் பெற்றது. 1995-ஆம் ஆண்டிற்குரிய 89-ஆம் தொகுதி வரை காலாண்டு இதழாகவே இச்செந்தமிழ் இதழ் விளங்கியது. 1996-ஆம் ஆண்டு சனவரித் திங்களில் மீண்டும் திங்கள் இதழாக மாற்றம் பெற்றது. இதனைக் குறித்து, 'ஒரு மகிழ்ச்சிச் செய்தி' என்று, 1996 சனவரி இதழில் சங்கச் செயலாளர், 'செந்தமிழ் இதழ் 93 ஆண்டுகளாகத் தொடர்ந்து தமிழ்மொழிக்கும், தமிழ்மக்களுக்கும் சீரிய தொண்டாற்றி வருவது அனைவரும் அறிந்ததே. அண்மைக் காலத்தில் பொருளாதாரம் முதலிய காரணங்களால், 'செந்தமிழ்' காலாண்டு இதழாக வெளிவர நேர்ந்தது. தமிழ்ப் புரவலர்களின் உதவியாலும், அறிஞர் பெருமக்களின் துணையாலும் செந்தமிழ் இதழ் 1996 சனவரி முதல் மீண்டும் திங்கள் இதழாக மலர்கிறது என்ற மகிழ்ச்சிச் செய்தியைப் பெருமிதத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன்.' என்று குறிப்பிட்டிருக்கிறார்.

1902 டிசம்பர் முதல், மாதந்தோறும் வெளியிடப் பெற்ற திங்களிதழான 'செந்தமிழ்' 1967-1968-ஆம் ஆண்டிலிருந்து 1995-ஆம் ஆண்டு வரை காலாண்டு இதழாகவும், 1996-ஆம் ஆண்டிலிருந்து மீண்டும் திங்களிதழாகவும் மலர்ந்து இன்று வரை தமிழ் மணம் பரப்பிக் கொண்டிருக்கிறது. தமிழாராய்ச்சிக் கட்டுரைகளை மட்டுமே தம்மகத்துக் கொண்டதாக விளங்கும் 'செந்தமிழ் இதழானது' உலகம் உள்ளவரை தமிழாய்வில் தமிழ்ச்சங்கத்தை நிலைநிறுத்திச் செயல்படும் என்பதில் யாதுமோர் ஐயமில்லை.

## அறக்கட்டளைகள்

"அன்னசத்திரம் ஆயிரம் நாட்டல்
ஆலயம் பதினாயிரம் வைத்தல்
அன்ன யாவினும் புண்ணியம் தேடி
ஆங்கோர் ஏழைக்கு எழுத்தறிவித்தல்"

எழுத்தறிவிக்கும் பணியை அறச்செயலாக, புண்ணியச் செயலாகப் பாரதியார் குறிப்பிடுவதைப் போலப் பாண்டித்துரைத்தேவரும், தாம் நிறுவிய தமிழ்ச்சங்கத்தை ஓர் அறநிலையமாகப் பதிவு செய்திருக்கிறார். தமிழ்ச்சங்கத்தில் இயங்கி வரும் செந்தமிழ்க் கல்லூரியில் பயிலும் மாணவர்களுக்கு உதவி செய்யும் வகையில் அறக்கட்டளைகளைச் சான்றோர் பலர் நிறுவியுள்ளனர். அவ்வாறு அமைந்த அறக்கட்டளைகள் பின்வருமாறு:

| | | | |
|---|---|---|---|
| 1. | காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீசங்கராச்சாரியார் அறக்கட்டளை | - | ரூ.10,000 (1992) |
| 2. | பெரியபனையான் - வீராத்தாள் அறக்கட்டளை | - | ரூ.10,000 |
| 3. | பேராசிரியர் க.அன்பழகனார் அறக்கட்டளை | - | ரூ.10,000 |
| 4. | ரா. இராகவையங்கார்,மு. இராகவையங்கார் அரசஞ்சண்முகனார் அறக்கட்டளை | - | ரூ.25,000 (1992) |
| 5. | ந.மு. வேங்கடசாமிநாட்டார் அறக்கட்டளை | - | ரூ. 5,000 (1992) |
| 6. | மதுரை ஆதீனம் அறக்கட்டளை | - | ரூ. 25,000 (1995) |
| 7. | மெய்யப்பன் - மீனாட்சி அறக்கட்டளை | - | ரூ. 10,000 (1995) |
| 8. | கவிக்குயில் கலியபெருமாள் உலகநாயகி வள்ளலார் அறக்கட்டளை | - | ரூ. 40,000 (1995) |
| 9. | முனைவர். அ. தட்சிணாமூர்த்தி அறக்கட்டளை | - | ரூ. 5,000 (1996) |
| 10. | முனைவர். மா. செண்பகம் அறக்கட்டளை | - | ரூ. 600 (1996) |
| 11. | குருநாதன் - விசாலாட்சி அறக்கட்டளை | - | ரூ. 10,000 (1998) |
| 12. | அம்மா அறக்கட்டளை | - | ரூ. 25,000 (2005) |

## காஞ்சி காமகோடி பீடாதிபதி அறக்கட்டளை:(1982)

காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள் மதுரைத் தமிழ்ச் சங்கத்திற்கு 12.3.1982 ஆம் நாளில் வருகை புரிந்தார். தமிழ்ச்சங்கம் விழாக்கோலம் பூண்டு அவரை வரவேற்றது. சுவாமி அவர்கள் மேடைக்கு வருவதற்கு முன், தமிழ்ச்சங்கத்தைச் சுற்றிப் பார்த்ததுடன் அதன் வளர்ச்சி குறித்து அக்கறையுடன் கேட்டு அறிந்தார். ஆசியுரை நல்கிய காஞ்சி சுவாமிகள், பாண்டித்துரைத் தேவரைப் பற்றியும், தேசியம் தெய்வீகம் ஆகிய இரண்டிற்கும் இணைப்புப் பாலமாக இருந்த பசும்பொன் முத்துராமலிங்கத் தேவரைப் பற்றியும் சொற்பொழிவாற்றினார். தமிழ்ச்சங்கம், சைவமும்,வைணமும் தழைத்தோங்கப் பாடுபட வேண்டும் என்றும் கூறினார். அத்துடன், தமிழ்ச்சங்கம் சார்பில் சைவ

சித்தாந்த வகுப்புகள் தொடங்குதற் பொருட்டுப் பத்தாயிரம் வெண்பொற்காசுகளையும் சுவாமிகள் மனமுவந்து அளித்தார்கள்.

இந்நன்கொடையால், காஞ்சி ஸ்ரீகாமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீசங்கராச்சார்ய சுவாமிகள் பெயரால் அறக்கட்டளை அமைக்கப் பெற்றது. இதன் மூலம் இலக்கிய நூல்களிலிருந்து இந்து சமயக் கருத்துகள் பற்றி மாணவர்களுக்கு ஆண்டுதோறும் தேர்வு நடத்திப் பரிசுகளும் தகுதிச் சான்றிதழ்களும் வழங்குவதற்குரிய திட்டங்களைச் செயல்படுத்துவதென்று சங்க ஆட்சிக்குழு முடிவெடுத்தது. இதனடிப்படையில், ஆண்டுதோறும் மதுரையில் உள்ள அனைத்துக் கல்லூரி மாணவ,மாணவியருக்குச் சைவ சமயச் சார்புடைய கட்டுரைப் போட்டி, பேச்சுப்போட்டிகளை நடத்திப் பரிசுகள் வழங்கப்படுகின்றன.

**பெரிய பனையன் – வீராத்தாள் அறக்கட்டளை:**

**பேராசிரியர் க. அன்பழகனார் அறக்கட்டளை :**

இவ்விரு அறக்கட்டளைகளையும் நிறுவியவர் முன்னாள் சட்டமன்ற உறுப்பினர் திரு. பெ.மலைச்சாமி அவர்களாவார். இவர் 1971ஆம் ஆண்டிலிருந்து 1982–ஆம் ஆண்டுவரை தமிழ்ச்சங்க ஆட்சிக்குழு உறுப்பினராக இருந்தார். இக்கால கட்டத்தில் அவர் இவ்விரு அறக்கட்டளைகளையும் அமைத்தார். ஆட்சிக் குழுவினருள் ஒருவராக இருந்து தமிழ்ச்சங்கச் செயல்பாடுகளிலும், சங்க வளர்ச்சியிலும் அக்கறை கொண்டவராகத் தன் பெற்றோரான பெரிய பனையன் - வீராத்தாள் பெயரில் ரூ.10,000/-ற்கான அறக்கட்டளையை நிறுவியுள்ளார். மேலும் அவரது ஆசிரியராகவும், அவர் சார்ந்திருந்த அரசியல் கட்சியின் தலைவர்களுள் ஒருவராகவும் விளங்கிய பேராசிரியர் க. அன்பழகன் அவர்கள் பெயரிலும் ரூ.10,000-ற்கான அறக்கட்டளையை நிறுவியுள்ளார்.

தமிழ்மொழியின் வளர்ச்சிக்காவும், கல்லூரியில் பயிலும் மாணவர்கள் சொல்லாற்றலில் வல்லவராகச் சொற்பொழிவாற்றும் திறம்மிக்கவராக வரவேண்டும் என்பதற்காகவும் இரு அறக்கட்டளைகளை நிறுவித் தமிழ்ச்சங்கத்திற்கும், கல்லூரி மாணவர்களுக்கும் தன் பங்களிப்பை நல்கியுள்ளார்.

**ரா. இராகவையங்கார், மு.இராகவையங்கார்,**

**அரசஞ்சண்முகனார் ஆகியோர் பெயரில் அறக்கட்டளை : (1992)**

தமிழ்மொழி வல்லுநரும், பல நூல்களைப் படைத்த சான்றோருமான திரு. மது.ச.விமலானந்தம் அவர்களின் தமிழ்ப் பணியைத்

தமிழுலகம் என்றும் போற்றிப் புகழ்ந்து கொண்டிருக்கும். இவரது தமிழ் இலக்கிய வரலாறு என்னும் நூலானது செறிவும், சிறப்பும், விளக்கமும் நிறைந்தது. இக்காலத்திலும் இளைஞர்கள், கற்றோர் பங்கேற்கும் போட்டித்தேர்வுகளுக்கு(Competative Examinations) அரசாங்கம் அமைத்த பாடத் திட்டத்தில் சேர்க்கப் பெற்ற தகுதி வாய்ந்த நூலாகும் இது. அத்தகு பெருமை வாய்ந்த பேராசிரியரும், பேரறிஞருமான திரு. மது.ச.விமலானந்தம் அவர்களைச் சிறப்பு விருந்தினராக 1992-ஆம் ஆண்டில் தமிழ்ச்சங்கம் அழைத்தது. மிகச் சிறந்த சொற்பொழிவினை வழங்கியதுடன், தமிழ்ச்சங்கத்தின் கல்லூரியில் பணியாற்றிய தமிழாசான்களின் பெயரில் அறக்கட்டளை ஒன்றை அமைத்தார்.

இராமநாதபுர சேது சமஸ்தானத்தின் அரசவைப் புலவராக (வித்வான்) விளங்கிய முதுபெருந் தமிழறிஞர் ரா.இராகவையங்கார் ஆவார். இவர் செந்தமிழ் இதழின் முதல் மூன்று தொகுதிகளுக்கு இதழாசிரியராகவும் பணியாற்றினார். இவர், பாண்டித்துரைத்தேவரின் நன்மதிப்பைப் பெற்ற தமிழாசிரியர் ஆவார். 'சேதுநாடும் தமிழும்' என்ற நூலை எழுதிச் சேதுபதி வேந்தர்களின் தமிழ்ப்பற்றையும், தமிழ்ப்பணியையும் போற்றியவர்.

ரா.இராகவையங்காரின் மைத்துனரான மு.இராகவையங்கார் தமிழ்ச்சங்கக் கலாசாலையின் ஆசிரியராகவும், செந்தமிழ் இதழின் 4,5,6 தொகுதிகளின் இதழாசிரியராகவும் பொறுப்பு வகித்தவர். இவர் வேளிர் வரலாறு, வஞ்சி மாநகர் போன்ற பல நூல்களையும், ஆய்வுரைகளையும் செந்தமிழ் இதழில் எழுதியும், நூல்களை வெளியிட்டும் தமிழுக்காகவும், தமிழ்ச்சங்கத்திற்காகவும் பணியாற்றியவர்.

சோழவந்தான் அரசஞ்சண்முகனார், தமிழ்ச்சங்கக் கலாசாலையின் ஆசிரியராகப் பணியாற்றியவர். பாண்டித்துரைத்தேவரின் அன்புக்கும் மதிப்பிற்கும் உரியவர். தொல்காப்பியத்திற்கு விருத்தி உரை எழுதியவர். இவர் பணியாற்றிய காலத்தில் நோயால் பாதிக்கப்பட, ஓராண்டு விடுமுறையும், அக்காலத்திற்கான ஊதியத்தையும் வழங்கியதுடன் மருத்துவச் செலவிற்கான உதவியையும் செய்து அவரைப் பாண்டித்துரைத்தேவரவர்கள் மலேசியாவிற்கு அனுப்பி வைத்தார்.

இவ்வாறு தமிழ்ச்சங்கத்தில் பணியாற்றிய மூன்று தமிழிறிஞர்களின் பெயரில் ரூ.25,000/- அறக்கட்டளையைத் திரு.மது.ச.விமலானந்தம்

அவர்கள் நிறுவினார்.

1. ரா. இராகவையங்காரின் நினைவாகச் சொற்பொழிவு நிகழ்த்துதல்.

2. தமிழ் இளங்கலை, முதுகலை இறுதியாண்டில் பயிலும் மாணவர்களிடையே தமிழ் இலக்கியப் படைப்புத்திறனை ஊக்குவித்து, இம்மாணவர்களுக்கு ஆண்டுதோறும் டிசம்பர் திங்களில் கட்டுரைப் போட்டி நடத்தி முதல், இரண்டு, மூன்றாம் இடம் பெறும் கட்டுரைகளுக்குப் பரிசு வழங்கல். பரிசினை ரொக்கத் தொகையாக வழங்கல்.

3. செந்தமிழ்க் கல்லூரியில் பயிலும் மாணவர்களில் கல்லூரிப் படிப்புக் கட்டணத்தை செலுத்த இயலாத நிலையில் உள்ள மாணவர்களுக்கு உதவித் தொகை வழங்கல்.

4. ஏழை மாணவர்களுக்கு அறக்கட்டளை நிதியின் வட்டித் தொகையிலிருந்து உதவுதல்.

இந்நோக்கங்களை அடிப்படையாக வைத்து நிறுவப்பட்ட இவ்வறக்கட்டளையின் பயன்பாட்டினை மாணவர்கள் ஆண்டுதோறும் பெற்று வருகின்றனர்.

<u>ந.மு.வேங்கடசாமி நாட்டார் அறக்கட்டளை:(1992)</u>

நாட்டார் என்று சொன்னால் அது ந.மு.வேங்கடசாமி நாட்டார் அவர்களையே குறிக்கும். இவர் பெயரில் தஞ்சை நெடுவாக்கோட்டை என்னும் ஊரைச் சேர்ந்த திரு. பொ.பவானந்தம் அவர்கள் ரூ.5000- வழங்கி அறக்கட்டளையை அமைத்துள்ளார்.

நாவலர் ந.மு.வேங்கடசாமி நாட்டார் தமிழ்ச்சங்கப்புலவர் பட்டம் பெற்றவர். ஆனால் இவர் தமிழ்ச்சங்கக் கலாசாலையில் சேர்ந்து படிக்கவில்லை. தனியே தானாகப் படித்துத் தமிழ்ச் சங்கம் நடத்திய பிரவேசம், பாலபண்டிதம், பண்டிதம் ஆகிய மூன்று தேர்வுகளையும் எழுதியவர். இம்மூன்று தேர்வுகளிலும் முதல் மதிப்பெண் பெற்று முதற்பரிசாகிய தங்கத்தோடாவை மூன்று முறை பெற்றவர். இவருக்கு மூன்றாவது முறையும் தங்கத்தோடாவை வழங்கியபோது பாண்டித்துரைத்தேவர், நாட்டார் அவர்களைக் கட்டியணைத்துப் பாராட்டினாராம். மொழிப்புலமையில் வல்லவரான ந.மு.வேங்கடசாமி நாட்டார் அவர்கள் தஞ்சை மாவட்டத்தில் உள்ள நடுக்காவேரி என்னும் ஊரில் பிறந்தவராவார். இவ்வூருக்கு அருகே உள்ள நெடுவாக்கோட்டையைச் சார்ந்த திரு. பொ.பவானந்தம் அவர்கள், 1992-ஆம் ஆண்டில் பேரறிஞர் மது.ச.விமலானந்தம் அவர்கள்

தமிழ்ச்சங்கத்திற்கு வந்தபோது தானும் வந்திருந்து ரூ.5000/- அறக்கட்டளையை நிறுவியுள்ளார்.

மாணவர்களுக்கிடையே கல்விசார்ந்த போட்டிகளை நடத்திப் பரிசு வழங்க வேண்டும் என்பது இவ்வறக்கட்டளையின் நோக்கமாகும்.

மதுரை ஆதீனம் அறக்கட்டளை:(1995)

செந்தமிழ்க் கல்லூரியின் முதல்வர் பொறுப்பேற்ற முனைவர்.அ.தட்சிணாமூர்த்தி அவர்கள், மதுரை ஆதீனம் ஞான தேசிக பரமாச்சார்ய சுவாமிகளிடம் மரியாதை கொண்டவர். கல்லூரி முதல்வரின் பெருமுயற்சியால், சமய வளர்ச்சிக்காவும், மாணவர்களின் கல்வி உதவிக்காகவும் மதுரை ஆதீனம் ரூ.25,000/- நல்கி அறக்கட்டளை ஒன்றை (1995-ஆம் ஆண்டில்) நிறுவியுள்ளது. சைவ சமயமும் தமிழும் போற்றப்பட வேண்டும் என்ற நோக்கத்திற்காகவும் ஏழைமாணவர்களுக்குப் படிப்பதற்கான உதவித் தொகையை வழங்க வேண்டுமென்பதற்காகவும் இவ்வறக்கட்டளையை மதுரை ஆதீனம் நிறுவியுள்ளது. வங்கியில் வைக்கப்பட்டுள்ள இவ்வறக்கட்டளையின் வட்டிப்பணத்திலிருந்து ஆண்டுதோறும் இதன் நோக்கம் நிறைவேற்றப்படுகின்றது.

மெய்யப்பன் - மீனாட்சி அறக்கட்டளை:(1995)

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் பேராசிரியரான முனைவர்.ச.மெய்யப்பன் அவர்கள், மணிவாசகர் பதிப்பகத்தின் நிறுவ்னராக ஆயிரக்கணக்கான நூல்களைப் பதிப்பித்து வெளியிடும் பணியைச் செய்து வருபவர். இத்தகைய பெருந்தகையாளர், 1995-ஆம் ஆண்டில் மதுரைத் தமிழ்ச் சங்கத்திற்கு வருகைபுரிந்து, சிறந்த சொற்பொழிவாற்றியதுடன் ரூ. 10,000/- வழங்கி அறக்கட்டளையை நிறுவினார். அவரது பெயருடன் அவரது துணைவியார் மீனாட்சி அவர்களின் பெயரையும் இணைத்து மெய்யப்பன்-மீனாட்சி என்ற பெயரில் அறக்கட்டளை அமைக்கப்பெற்றது.

இதழியல், பதிப்பியல், சான்றோர் புகழ் பரப்புதல் ஆகியவற்றை நோக்கமாகக் கொண்டு இவ்வறக்கட்டளை திகழ்கிறது.

கவிக்குயில் கலிய பெருமாள் உலகநாயகி
வள்ளலார் அறக்கட்டளை: (1995)

மலேசியா நாட்டைச் சேர்ந்த தமிழறிஞரான கவிக்குயில் கலியபெருமாள் அவர்கள், தமிழ் நூல்களை ஆராய்ச்சி செய்தற் பொருட்டு 1995-ஆம் ஆண்டில் தமிழ்ச்சங்கத்திற்கு வருகை புரிந்தார். மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தின் ஆய்வு மாணவர்களுடனும் செந்தமிழ்க் கல்லூரி ஆய்வு மாணவர்களுடனும் விவாதங்கள் நடத்தினார். சங்க இலக்கியம் முதலாக இக்கால இலக்கியம் வரையுள்ள அத்தனை தமிழ் இலக்கியங்களில் உள்ள வாழ்வியல் கூறுகள், வாழ்க்கை மரபுகள் குறித்துச் செந்தமிழ்க் கல்லூரிப் பேராசிரியர்களுடன் கலந்துரையாடித் தமது ஆய்வுப்பணியைத் தொடர்ந்தார். அது சமயம் தமிழ்ச்சங்கத்தைப் பற்றியும்,கல்லூரியைப் பற்றியும்,நூலகத்தைப் பற்றியும் நன்கறிந்து கொண்டார். சங்கத்தின் பால் ஈடுபாடு கொண்டவராக அறக்கட்டளையை நிறுவினார்.

கவிக்குயில் கலியபெருமாள் அவர்கள் வள்ளலாரின் வழியைப் பின்பற்றும் பண்பினர். அருட்பெருஞ்சோதி தனிப் பெருங்கருணை என்ற தாரக மந்திரத்தை வாழ்வாகக் கொண்டவர். அதனால் அவரது பெயருடன் அவரது மனைவி பெயரையும் இணைத்துப் பின் வள்ளலார் அறக்கட்டளையை நிறுவினார்.

1995-ஆம் ஆண்டில் ரூ. 10,000 வழங்கி அறக்கட்டளையைத் தொடங்கினார். பின்னர் தமிழ்நாட்டிற்கு வரும் போதெல்லாம் தமிழ்ச் சங்கத்திற்கும் வருகைபுரிந்து, அறக்கட்டளை நிதிக்கெனக் கூடுதலாகக் கொடுத்து இப்போது ரூ.40,000/- ஆக இவ்வறக்கட்டளை நிதி உயர்ந்துள்ளது.

செந்தமிழ்க் கல்லூரியில் பயிலும் மாணவர்களுக்கு, வள்ளலாரின் செயல், அவரது பண்பாடு, அவரது புகழ் ஆகியவற்றை எடுத்துரைத்து வள்ளலார் பற்றிய அறிவை மாணவர்கள் பெறவேண்டும் என்ற உயர்ந்த நோக்கத்தில் இவ்வறக்கட்டளை நிறுவப்பட்டுள்ளது.

### முனைவர். தட்சிணாமூர்த்தி அறக்கட்டளை: (1996)

***முனைவர்.அ.தட்சிணாமூர்த்தி*** 1991-ஆம் ஆண்டு முதல் 1996-ஆம் ஆண்டு வரை, செந்தமிழ்க்கல்லூரி முதல்வராகப் பணியாற்றியவர். இவர் தஞ்சாவூரைச் சேர்ந்தவர். முதல்வர் பொறுப்பேற்றிருந்த காலத்தில் தஞ்சைப்பகுதியில் உள்ள அறிஞர் பெருமக்களைத் தமிழ்ச்சங்கத்திற்கு அழைத்து வந்து, சிறப்பான சொற்பொழிவுகட்கு ஏற்பாடு செய்த பெருந்தகையாளர். 1996-ஆம் ஆண்டில் முதல்வர் பொறுப்பிலிருந்து பணி ஓய்வு பெற்ற போது

அவரது பெயரில் அறக்கட்டளை நிறுவப் பெற்றது. முதல்வரும், சில பேராசிரியர்களும் இணைந்து ரூ.5000/- அறக்கட்டளையை நிறுவினர். முனைவர். தட்சிணாமூர்த்தி என்ற பெயரில் அறக்கட்டளை நிறுவப்பெற்றது.

உரையாசிரியர்கள் பற்றிய சொற்பொழிவு, செந்தமிழ்க் கல்லூரியில் பயிலும் மாணவ-மாணவியரிடையே தமிழறிவு, ஆற்றல் இவைகளை மேம்படுத்தும் வகையில் கவிதை, கட்டுரைப் போட்டிகளை நடத்திப் பரிசு வழங்குவது; இலக்கிய வினாவிடை நிகழ்ச்சிகள், செய்யுள் மனப்பாடப் போட்டிகள் நடத்துவது ஆகிய நோக்கங்களைக் கொண்டதாக இவ்வறக்கட்டளை அமைக்கப்பெற்றது.

<u>முனைவர்.மா.செண்பகம் அறக்கட்டளை:(1996)</u>

பாத்திமாக் கல்லூரியின் தமிழ்ப் பேராசிரியையாகப் பணியாற்றிய முனைவர்.மா.செண்பகம் அவர்கள், 1996-ஆம் ஆண்டில் செந்தமிழ்க் கல்லூரியின் இலக்கியமன்ற விழாவிற்குச் சிறப்புச் சொற் பொழிவாளராக அழைக்கப் பெற்றார். சிறப்பு விருந்தினராக வருகை புரிந்த முனைவர்.மா.செண்பகம் அவர்கள், தமது சொற்பொழிவின் முடிவில் ரூ.600/- வழங்கினார். முதுகலைத் தமிழ் வகுப்பில், சங்க இலக்கியத்தில் முதன்மை பெறும் மாணவர்களுக்குப் பரிசு வழங்க வேண்டும் என்ற குறிக்கோளுடன் அவர் வழங்கிய பணத்தைக் கொண்டு அவர் பெயரிலேயே அறக்கட்டளை அமைக்கப் பெற்றது.

<u>குருநாதன்-விசாலாட்சி அறக்கட்டளை:(1998)</u>

மதுரை தியாகராசர் கல்லூரியின் தமிழ்ப் பேராசிரியரும், நாடறிந்த மிகச் சிறந்த பேச்சாளருமாகிய முனைவர்.கு.ஞானசம்பந்தன் அவர்கள், **'குருநாதன்-விசாலாட்சி'** என்ற பெயரில் ரூ.10,000/- வழங்கி அறக்கட்டளை நிறுவியுள்ளார்.

1998-ஆம் ஆண்டில் நடைபெற்ற செந்தமிழ்க் கல்லூரியின் ஆண்டுவிழாவிற்குச் சிறப்புச் சொற்பொழிவாளராக முனைவர்.கு.ஞானசம்பந்தன் வருகை புரிந்தார். இவர், மதுரைத் தமிழ்ச்சங்கத்தில் ஆசிரியராகப் பணியாற்றிய தமிழாசான் அரசஞ்சண்முகனாரைப் பற்றி முனைவர் பட்ட (Ph.D) ஆய்வு செய்தவர். அதனால் தமிழ்ச்சங்கத்துடன் நெருங்கிய தொடர்புடையவர்.கல்லூரி ஆண்டுவிழாவிற்கு இவரை அழைத்த போது ரூ.10,000 வழங்கித் தன்னுடைய தந்தையார் குருநாதன்,

தாயார் விசாலாட்சி இவ்விருவரது பெயரில், 'குருநாதன்-விசாலாட்சி' அறக்கட்டளையை நிறுவினார்.

கல்வியறிவு கொடுத்து அவையத்து முந்தியிருக்கச் செய்த தந்தைக்கும், ஈன்றெடுத்த தாய்க்கும் நன்றி செலுத்தும் விதமாக,

> **" மகன் தந்தைக் காற்றும் உதவி இவன் தந்தை**
> **என்னோற்றான் கொல்எனும் சொல் "**

என்ற குறட்பாவிற்கு இணங்கப் பெற்றோர்க்குப் பெருமை சேர்க்கும் வகையில் இவ்வறக்கட்டளையை அமைத்திருக்கிறார்.

'தமிழ் பயிலும் மாணவ-மாணவியருக்குக் கல்வி உதவித் தொகை அளித்தல்' என்னும் நல்நோக்கமானது இவ்வறக்கட்டளையின் வாயிலாக நிறைவேற்றப்படுகிறது.

<u>அம்மா அறக்கட்டளை:</u>

சட்டமன்ற உறுப்பினரான திரு.அன்பழகன், செந்தமிழ்க் கல்லூரியின் முன்னாள் மாணவர். ஓராண்டு காலம் செந்தமிழ்க் கல்லூரியில் பணியாற்றியவர். கல்லூரியின் பால் மிகுந்த ஈடுபாடு கொண்டவர். நிலக்கோட்டைத் தொகுதியின் சட்டமன்ற உறுப்பினராக மக்களால் தேர்ந்தெடுக்கபட்டவர். 2005-ஆம் ஆண்டு டிசம்பர் திங்களில், பேராசிரியர்.அன்பழகன் சார்ந்திருந்த கட்சித் தலைவியும், அப்போது முதலமைச்சருமாக இருந்த **மாண்புமிகு செல்வி. ஜெயலலிதா** அவர்களைச் சிறப்பிக்கும் பொருட்டு **'அம்மா அறக்கட்டளை'** என்ற பெயரில் ரூ.25,000/- வழங்கி அறக் கட்டளையை அமைத்திருக்கிறார்.

தான் படித்த கல்லூரியையும், தன்னைச் சட்டமன்ற உறுப்பினராக்கிய தலைவியையும் மறவாது, இவ்வறக்கட்டளையைப் பேராசிரியர் அன்பழகன் நிறுவியுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது.

நன்றாகப் பயிலக்கூடிய ஏழை மாணவர் இருவருக்கும், நன்கு படிக்கக்கூடிய தாழ்த்தப்பட்ட ஏழை மாணவர்களுக்கும் உதவி செய்ய வேண்டும் என்ற உயரிய நோக்கத்தைக் கொண்டதாக **'அம்மா அறக்கட்டளை'** நிறுவப்பட்டுள்ளது.

<u>அறக்கட்டளை நிதி:</u>

அறக்கட்டளைகளின் மூலமாகக் கிடைத்த நிதியை வங்கியில் சேமிப்பு

நிதியாக வைத்து, ஆண்டுதோறும் கிடைக்கின்ற வட்டிப் பணத்திலிருந்து அறக்கட்டளையின் நோக்கங்கள் நிறைவேற்றப் படுகின்றன. ஒவ்வொரு அறக்கட்டளை நிதியும் தனித்தனியாக அதனதன் பெயர்களிலேயே வங்கியில் பாதுகாக்கப் படுகின்றன. வங்கியில் பணம் எடுப்பதும், மாணவர்களுக்குப் பயன்படுத்துவதும், சொற்பொழிவுகளை நிகழ்த்துவதும், போட்டிகளை நடத்துவதுமான பணிகள் யாவும் தமிழ்ச்சங்கச் செயலாளரின் பொறுப்பிலேயே நடைபெறுகின்றன.

செந்தமிழ்க் கல்லூரியில் பயிலும் மாணவர்களின் கல்வி நலனில் அக்கறை கொண்டதாக அறக்கட்டளைகள் அமைக்கப்பட்டுள்ளன என்பதை நன்கறிய முடிகிறது.

சைவமும் தமிழும் இரண்டறக்கலந்தவை. அதனால் தமிழோடு சைவமும் வளர வேண்டும். சமயம் சார்ந்த நல்லறங்களை மாணவர்கள் கற்றுத் தெளிய வேண்டும்; வள்ளலாரின் நெறியினைப் பின்பற்ற வேண்டும்; ஆன்மிக உணர்வும், ஆன்மிக நெறியும் மாணவர்களிடையே நிலைபெற வேண்டும் ஆகிய நோக்கங்களை நிறைவேற்றும் வகையில் இவ்வறக்கட்டளைகள், விளங்குகின்றன.

தமிழ் பயிலும் மாணவர்கள் என்பதால் எழுத்தாற்றலும் சொல்லாற்றலும் மிக்கவர்களாக அவர்கள் வாழ்வில் வெற்றி பெற வேண்டும் என்ற நோக்கத்தில் கல்வியையும் திறமைகளையும் வளர்க்கும் விதத்தில் அமைக்கப்படுகின்றன.

பாண்டித்துரைத்தேவரவர்கள் இலவசமாகக் கல்வியும், உணவும், உடையும், உறையுளும் வழங்கியதைப் போலச் செந்தமிழ்க் கல்லூரியில் பயிலும் ஏழை மாணவ-மாணவியர்க்கு உதவுவதையும், தாழ்த்தப்பட்ட மாணவர்களை ஊக்குவிக்கும் பொருட்டுப் பொருளுதவி செய்வதையும் நோக்கமாகக் கொண்டுள்ளன.

அறக்கட்டளை நிறுவிய சான்றோர்களின் நல்லெண்ணமும், நன்றிமறவாத்தன்மையும், உயர்ந்த நோக்கமும், தமிழை நேசிக்கும் பண்பும் அவர்கள் அமைத்த அறக்கட்டளைகளில் மூலம் புலப்படுகின்றன.

## நூலகம்

மதுரைத் தமிழ்ச்சங்கம் என்று சொல்லும் போதே அதன் நூலகமே எல்லாராலும் புகழ்ந்து பேசக்கூடிய சிறப்பைப் பெற்றுத் திகழ்கிறது. புதிய கட்டிடம் உருவாவதற்கு முன்னர் இருந்த தமிழ்ச் சங்கத்தின் நடுக் கூடத்தில் நூலகம் அமைந்திருந்தது. தமிழ்ச்சங்கக் கட்டிடமாக இருந்த மையக் கட்டிடம் இப்போது நூலகக் கட்டிடமாக மாறி உள்ளது. சங்கம் தோன்றியகாலம் முதல் இன்றளவும் பாண்டியன் நூலகம் என்ற பெயரிலேயே வழங்கி வருகிறது.

முதலில் இந்நூலகம் பொதுமக்கள் வந்து படித்துச் செல்லும் வகையில் அமைந்திருந்தது. ஆனால் இன்று கல்லூரி மாணவர் களுக்கும், பல்கலைக்கழக மாணவர்க்கும், ஆய்வாளர்களுக்கும், பேராசிரியர்களுக்கும், இந்திய நிர்வாகப்பணி போன்ற இந்திய அளவில் நடைபெறும் போட்டித்தேர்வுகளில் பங்கேற்பவருக்கும் பயன்பட்டு வருகிறது. மிகப் பழமையான தமிழ் இலக்கிய, இலக்கண,வரலாற்று நூல்கள், இன்று வரை வெளியாகும் புதிய இலக்கியத் தரம் வாய்ந்த நூல்கள், இக்காலக் கவிதை,உரைநடை, நாவல்,சிறுகதை நூல்கள் யாவும் நிறைந்த சிறந்த நூலகமாக இயங்கி வருகிறது.

கல்லூரி மாணவர்கள்,ஆசிரியர்கள்,ஆய்வாளர்கள் படிப்பதற்குரிய நூல்கள் ஒரு பகுதியாகவும், தமிழ்ச்சங்க நூல்கள் ஒரு பகுதியாகவும் இரண்டு பிரிவாக நூல்கள் வைக்கப்படுகின்றன. தமிழ்ச்சங்கநூல்கள் யாவும் மிகப் பழமையானவை. இவை பார்வை நூல்கள் (Reference Books) வரிசையில் பேணிப் பாதுகாக்கப்பட்டு வருகின்றன. அவற்றை நூலகத்திலிருந்து மட்டும் தான் படிக்க வேண்டும். வெளியில் எடுத்துச் செல்ல இயலாது. செந்தமிழ்க் கல்லூரி நூல்களை எடுத்துச் செல்பவர்கள் 15 நாட்களுக்குள் திருப்பிக் கொடுத்து விட வேண்டும். கல்லூரியில் பணியாற்றுபவர், படிக்கும் மாணவர், ஆட்சிக்குழு மற்றும் கல்விக்குழு உறுப்பினர், தமிழ்ச்சங்கத்தோடு தொடர்புடையவர் ஆகியவர்கள் மட்டுமே நூல்களை எடுத்துச் செல்ல முடியும். பிற கல்லூரிகள் மற்றும் பல்கலைக்கழகங்களில் பயில்வோர், ஆய்வாளர்கள், இந்திய ஆட்சிப்பணித்தேர்வுகள், பல்கலைக்கழக மான்யக் குழுவின் தேர்வுகள் (IAS) (UGC) எழுதுவோர் நூலகத்திற்கு வந்து தமது படிப்பிற்குரியதும், தேர்விற்குரியதுமான நூல்களைப் படித்துப் பயன்பெறுவதற்குத் தமிழ்ச்சங்கத்தின் நூலகம் பெருந்துணை புரிகிறது.

பல்கலைக்கழக மான்யக்குழு (University Grants Commission) நிதிநல்கையின் 8வது ஐந்தாண்டுத் திட்டம் (VIIIth Plan); 9வது ஐந்தாண்டுத்திட்டம் (IXth Plan) மற்றும் பத்தாவது ஐந்தாண்டுத் திட்டம் (Xth Plan) ஆகிய திட்டங்களின் கீழ் நூல்கள் வாங்குவதற்கென ஆண்டுதோறும் மான்யக்குழு நிதி வழங்கி உள்ளது. அவ்வாறு கிடைத்த நிதி முழுவதும் நூல்கள் வாங்குவதற்காகவே செலவிடப்படுகிறது.

கல்விசால் பெரியோர்களும், பேராசிரியப் பெருமக்களும் நூலகத்திற்கென நூல்களையும், நூல்கள் வைப்பதற்குரிய பீரோக்களையும் நன்கொடையாக வழங்கியிருக்கின்றனர். தமிழ்ச் சங்கத்தின் செயலாளர்களாகப் பணியாற்றிய T.C. சீனிவாச ஐயங்கார், நாவலர் சோமசுந்தர பாரதியார் ஆகியோர் தம்மிடமிருந்த தமிழ் நூல்களை நூலகத்திற்கென வழங்கியுள்ளனர். தற்காலத்தில் காவல்துறை அதிகாரியாகப் பணியாற்றிய முனைவர். வாசு.கணபதி, பல்கலைக்கழகத் துறைத் தலைவர் முனைவர்.இரா. மோகன், மதுரை அகில இந்திய வானொலியில் இயக்குநராகப் பணியாற்றிய திரு.இளசைசுந்தரம், கல்லூரி முன்னாள் முதல்வர் செ.கந்தசாமி போன்ற பல அறிஞர்கள் நூலகத்திற்கென நூல்களையும், பீரோக்களையும் நன்கொடையாக வழங்கியுள்ளனர்.

தற்போது 2006-ஆம் ஆண்டில் நூலகத்தில் உள்ள நூல்களின் மொத்த எண்ணிக்கை:

| | | |
|---|---|---|
| கல்லூரி நூல்கள் | - | 22,000 |
| தமிழ்ச்சங்க நூல்கள் | - | 12,085 |
| | | 34,085 |

ஏறத்தாழ 35000 நூல்கள் வரை நிறைந்துள்ள நூல்களின் களஞ்சியமாகப் பாண்டியன் நூலகம் இயங்கி வருகிறது.

செயல்திறம் மிக்க நூலகப்பணியில், திரு.பா.முருகேசன் எம்.ஏ., பி.லிப்.சயின்ஸ்., தேர்வுநிலை நூலகராகவும் திரு.எம்.முத்துமாயாண்டி பி.காம்.,எம்.லிப்.சயின்ஸ்., நூலக உதவியாளர் நூலகத்தில் பணியாற்றுகின்றனர். இனிய முகத்துடனும் ஈடுபாட்டுடனும் செய்யும் பணியின் காரணமாகப் பழம்நிறைந்த மரத்தை நாடிவரும் பறவைகள் போல கற்கும் மாணவரும், கல்விசால் சான்றோரும், ஆய்வாளரும் நூலகத்தை நாடிவந்து படித்துப் பயன்பெறுகின்றனர்.

105 ஆண்டுகளாக இயங்கி வரும் நூலகம் மேலும் மேலும் வளர்ந்து சிறந்து வருவதை நாளும் காணலாம். இந்தச் சிறப்பான சேவை நாளையும் தொடரும் என்பதில் யாதுமோர் ஐயமில்லை.



## பொன்.பாண்டித்துரைத்தேவர்

**மதுரை நான்காம்**

**தமிழ்ச்சங்க நிறுவனர்**

*தமிழே தன் முன்னுரிமை என்று கருதிக் காலத்தே செய்த கடமையாளராக, தமிழர் மானம் காத்த சேதுபதி மன்னராக நான்காம் தமிழ்ச்சங்கத்தை உருவாக்கிய வரலாறு இந்நூலில் பதிவு செய்யப்பட்டிருக்கின்றது.

திருமிகு.இரா. அழகுமலை
*தமிழ்ச்சங்கச் செயலாளர்*

*தமிழர்களின் தமிழ்மொழி உணர்வும், இலக்கிய வளமையும் நிலைபெற்றுத் திகழ, காலத்தே தொடங்கிய தமிழ்க் கோவிலாக நான்காம் தமிழ்ச்சங்கம் விளங்குகின்றது.

திருமிகு. இரா. குருசாமி
*செந்தமிழ்க்கல்லூரிச் செயலாளர்*

*தமிழ் வரலாற்றில் காலூன்றிய தமிழறிஞர்கள் பயின்ற பாசறை மதுரைத்தமிழ்ச்சங்கம் என்றறியும் போது வானளாவிய மகிழ்ச்சி பொங்குகின்றது.

டாக்டர் க. சின்னப்பா
*செந்தமிழ்க்கல்லூரி முதல்வர்*